சிவாஜி

# நம் நாட்டில்

திருச்சிற்றம்பலக் கவிராயர் முன்பொரு கவியரங்கில் நம் நாட்டின் நிலையுரைத்தார். மாறாத பேருண்மை. மற்றொருகால் செவி சாய்ப்போம்.

★

நம் நாட்டில்
வெள்ளிமலை உருகி
வீழ்ந்தன்ன வெள்ளருவி
துள்ளி விழுந்திறங்கித்
துயரங்களைந்து வரும்
வெள்ளப் பெருக்கத்தை
வியன் கங்கையாற்றொழுக்கின்
வள்ளற் பெருந்தனத்தை
வாசாமகோசரமாய்
கொள்ளை மகிழ்ச்சிதரக்
கூறிடவும் திறமுண்டு
ஆனாலும்,

குறைவற்ற செல்வங்கள்
குவிந்தும் வயற்புறத்தில்
நிறைவயிற்றுச் சூலியைப்போல்
நெற்கதிர்கள் தலை சாய்த்தும்
அரைவயிற்றுக் கஞ்சிக்கும்
ஆலாய்ப் பறக்கின்ற
குறைவயிற்று ஏழைகளைக்
கூறாதிருந்திடவோ,

ஆறுண்டு, குளமுண்டு
அணியணியாய் நெல்வயல்கள்
வீறுடனே ஒளிபரப்பி
விளைவதுண்டு, என்றாலும்
சோறுண்டோ, வாழ்விற்
சுகமுண்டோ இதையெல்லாம்
கூறாதிருந்து விட்டாற்
குறைவிழுந்து போகாதோ ?

வானுயர்ந்த மாடங்கள்
வளர்ந்தும் குடியிருக்க
சாணிலமு மில்லாமல்
சந்துகளில் பொந்துகளில்
கூனிக் கிடந்துழன்று
குற்றுயிராய் வாழ்வதனை
ஆணித்தரமாக
அறையாதிருந்திடவோ ?

வானத்து வில்லழகின்
வண்ணத்தை, தினைப்புனத்துக்
கானமயில் தோகைக்
கண்ணாயிரம் கோடி
மீனக்குலத் துடிப்பை
மின்னொளியை ஒன்றாக்கி

பஞ்சுப்புகை உலைத்துப்
பனிப்புகைபோல் நூல் நூற்று
மஞ்சுவண்ணத் தன்மையிலே
மஸ்லின் துணிநெய்த
கஞ்சமலர்க் கரத்தைக்
கண்ணொற்றிப் புகழ்ந்திடவும்
நெஞ்சில் இடமுண்டு,
இன்றைக்கோ

அஞ்சு கஜத் துணிக்கும்
அடித்துப் புரண்டோடிக்
கெஞ்சுகின்றோம் கலிசூழ்ந்து
கேடுற்ற நளனைப்போல்
கொஞ்சத் துணி உடுத்திக்
குன்றிஉடல் வாழ்வதனை
செஞ்சொற் கவியரங்கில்
செப்பாதிருந்திடவோ ?

வெள்ளையரின் ஆட்சிக்கு
வேட்டுவைத்து அடிமையெனும்
பள்ளத்தில் கிடந்துழன்ற
பாரதத்தை விழிப்பூட்டி
உள்ளக்கனலேற்றி
உதிரப் புனல் பெருகும்
வெள்ளத்தே முக்குளித்து
வெளிக்கொணர்ந்த விடுதலையை
துள்ளும் கவிமொழியில்
தொழுதேத்த ஆசையுண்டு
என்றாலும்,

கள்ளக் கடை நடத்தக்
கச்சைகட்டும் பாவியர்கள்
வெள்ளை மனத்தவர்போல்
வெளிவேடம் போட்டாடி
கொள்ளையடித்து நிதம்
கொழுப்பவரின் சூழ்ச்சிக்கு
பள்ளம் பறிப்பதற்குப்
பாட்டெழுதா திருந்திடவோ ?



# இந்தியாவில் தொழில்நுட்பக் கல்வி

இந்தியாவில் தொழில், விவசாயம், போக்குவரத்து பாதுகாப்பு, வைத்திய சுகாதார வசதிகள் ஆகியவற்றை அபிவிருத்தி செய்வதற்கான திட்டங்களை வகுக்கும்போது, தொழில் நுட்பக் கல்வி போதிப்பதற்கு நாட்டில் தற்போதுள்ள வசதிகளை ஆராய்ந்து பார்ப்பது மிக அவசியமாயிற்று. இதையொட்டி, தொழில் நுட்பத் துறையில் நாட்டின் ஆள்பலத்தை அறிவதற்காக விஞ்ஞான ஆள்பலக் கமிட்டியொன்று அமைக்கப்பட்டது. இந்தியாவிலுள்ள விஞ்ஞானிகளின் எண்ணிக்கையும் தொழில் நுட்பம் தெரிந்தவர்களின் எண்ணிக்கையும் நாட்டில் தற்போதைய தேவைகளைப் பூர்த்திசெய்யப் போதியவையாயில்லை என்று இந்தப் பரிசீலனையிலிருந்து வெளியாயிற்று. எண்ணிக்கையில் மாத்திரமல்லாமல் வேலைத் திறமையிலும் இவர்கள் போதிய படி இல்லையென்றும் தெரிய வந்தது. விசேஷப் பயிச்சி பெற்ற எஞ்சினியர்களையும், விஞ்ஞான ஆராய்ச்சியாளரையும் பயிலுவிக்கப்போதியவசதியின்மையே இந்த நிலை ஏற்பட்டுள்ளதற்குக் காரணமாகும்.

நாட்டில் தொழில் நுட்பக் கல்வி வசதிகளை விஸ்தரிப்பது பற்றி விரிவாகப் பரிசீலனை செய்து சர்க்காருக்கு யோசனை கூறுவதற்காக, 1945 ஆரம்பத்தில் ஒரு கமிட்டி (சர்க்கார் கமிட்டி) நியமிக்கப்பட்டது. அக் கமிட்டி நிலைமையை நன்கு பரிசீலனைசெய்து, இப்போது இந்தியாவின் நான்கு பகுதிகளிலும், அமெரிக்காவிலுள்ள மஸாசூஸெட்ஸ் தொழில் நுட்பப் பயிற்சிக் கழகத்தையொட்டி, நான்கு உயர்தர தொழில் நுட்பப் பயிற்சிக் கழகங்களை அமைக்கவேண்டுமென்று மத்திய சர்க்காருக்குச் சிபார்சு செய்தது. இந்தக் கழகங்களை நிர்மாணிப்பதற்கான திட்டங்களையும் செலவு மதிப்பிடுகளையும் அக் கமிட்டியே தயாரித்து சர்க்காருக்கு அனுப்பிவைத்தது. கிழக்குப் பகுதியில் ஒன்றும் மேற்குப் பகுதியில் ஒன்றுமாக இரண்டு கழகங்களை உடனடியாக ஏற்படுத்துவதென இந்திய சர்க்கார் முடிவுசெய்து இதற்கான வேலையையும் ஆரம்பித்து விட்டனர். மேலும், இரண்டு கழகங்களை—தென் பகுதியில் ஒன்றும், வட பகுதியில் ஒன்றும்—பின்னர் அமைக்க உத்தேசிக்கப்பட்டிருக்கிறது. புதிதாக அமைக்கப்படவிருக்கும் ஒவ்வொரு கழகத்திலும் எஞ்சினீயரிங், தொழில் நுட்பத் துறைகளின் பல்வேறு பிரிவுகளிலும், 2,000 மாணவர்களுக்கும், 1,000 ஆராய்ச்சியாளருக்கும் பயிற்சியளிக்க இடவசதியிருக்கும்.

கிழக்குப் பகுதிக்கான பயிற்சிக் கழகம், கல்கத்தாவிலிருந்து 70மைல் தூரத்திலுள்ள ஹிஜ்லி என்ற இடத்தில் அமைக்கப்படும். இதற்கான வேலைகள் இப்பொழுது நடைபெற்று வருகின்றன. பங்களூரிலுள்ள இந்திய விஞ்ஞான பயிற்சிக் கழகத்தின் டைரெக்டராக இருந்துவந்தவரும், சமீபகாலம் வரை இந்திய சர்க்கார் தொழில் சப்ளை இலாகா டைரக்டர்ஜெனரலாக இருந்து வந்தவருமான டாக்டர் ஜே. ஸி. கோஷ் இக் கழகத்தின் முதல் டைரெக்டராக நியமிக்கப்பட்டிருக்கிறார். வெளிநாட்டு நிபுணர்கள் பலர் இக் கழகத்தின் பேராசிரியர்களாக நியமிக்கப்பட்டுள்ளனர். இவர்களில் இரண்டு பேர் ஏற்கெனவே தமது இலாக்காக்களின் பொறுப்பை ஏற்றுக் கொண்டுவிட்டனர். இந்தக் கழகத்தை அமைக்க மூலதனச் செலவு 304 லட்ச ரூபாயும், முறைச் செலவு 44 லட்ச ரூபாயும் ஆகுமென்று சர்க்கார் கமிட்டி மதிப்பிட்டிருந்தது.

இந்த மதிப்பீடுகள் இப்பொழுது பரிசீலனை செய்யப்பட்டு வருகின்றன. முதலில் மதிப்பிடப்பட்டதைவிட அதிக பணம் தேவையாயிருக்குமென்றே இப்பொழுது தோன்றுகிறது. ஆராய்ச்சித் துறை மாணவர்கள் சிலரை இந்த வருஷமே கழகத்தில் சேர்த்துக் கொள்வது சாத்தியமாயிருக்குமென்று தோன்றுகிறது.

மேற்குப் பகுதிக்கான கழகம் பம்பாயில் நிறுவப்படும். இந்தக் கழகங்களில், அடிப்படையான விஷயங்களுடன் கூட, அவையவை அமைந்துள்ள பிரதேசத்தின் பிரத்தியேகத் தேவைகளைப் பூர்த்திசெய்யும் வகையில், விசேஷப் பயிற்சிகளும் அளிக்கப்படும்.

## பங்களூர் விஞ்ஞான ஆராய்ச்சிக் கழகம்

விஞ்ஞான, தொழில் நுட்பத் துறைகளில் உயர்தரப் பயிற்சிக்கும், ஆராய்ச்சிக்கும் தலைசிறந்து விளங்கும் ஸ்தலங்களில் பங்களூரிலுள்ள இந்திய விஞ்ஞான ஆராய்ச்சிக் கழகமும் ஒன்றாகும். விஞ்ஞான ஆராய்ச்சி ஸ்தலமாக 1904-ல் ஆரம்பிக்கப்பட்ட இக்கழகம், எஞ்சினீயரிங் தொழில்நுட்பத் துறைகளில் பல்வேறு பிரிவுகளிலும் உயர்தர பயிற்சியளிக்க வசதி கொண்டதொரு பெரிய ஸ்தாபனமாக இப்பொழுது விளங்கி வருகிறது. கழகத்தின் பல்வேறு இலாக்காக்களையும் மேலும் அபிவிருத்தி செய்வதற்கான திட்டமொன்றும் இப்பொழுது ஆரம்பித்து வைக்கப்பட்டிருக்கிறது. இந்தத் திட்டத்துக்கு ஆரம்பச் செலவு 42·21 லட்சமும் முறைச்செலவு 4.24 லட்ச ரூபாயும் ஆகுமென்று மதிப்பிடப்பட்டிருக்கிறது.

சுமார் 78 லட்ச ரூபாய் செலவில் மின்சார எஞ்சினீரிங் பிரிவொன்றும் இப்பொழுது புதிதாக ஏற்படுத்தப்பட்டு வருகிறது. சுமார் 23 லட்ச ரூபாய் செலவில் மின்சார எஞ்சினீரிங் ஆராய்ச்சி நிலையமொன்றும் அமைக்கப்பட்டு வருகிறது.

## சர்வகலாசாலைகளுக்கு மானியம்

விஞ்ஞான, தொழில் நுட்பத் துறைகளில் ஆராய்ச்சிகளை ஊக்குவிப்பதற்காக, மத்திய சர்க்கார், 1949–50-ல் குறிப்பிட்ட சில சர்வகலாசாலைகளுக்கு, 20½ லட்ச ரூபாய் மானிய வழங்கியிருக்கின்றனர்.

மாதம் 200 ரூபாய் வீதம் 50 ஸீனியர் ஆராய்ச்சியாளருக்கும், மாதம் 100 ரூபாய் வீதம் 150 ஜூனியர் ஆராய்ச்சியாளருக்கும் உபகாரச் சம்பளம் அளிக்கவும் ஏற்பாடாகியிருக்கிறது.

உயர்தரப்பயிற்சிக்கான வசதிகள் அதிகம் ஏற்படவில்லையென்றாலும் எஞ்சினீயரிங் பட்டப் படிப்புக்கான வசதிகள்—முக்கியமாக கட்டட வேலை, யந்திரம், மின்சாரம் ஆகிய மூன்று முக்கிய பிரிவுகளிலும்—பெருமளவு பெருகியிருப்பது குறிப்பிடத் தக்கதாகும்.

கட்டட வேலை, மின்சாரம், யந்திரம் ஆகிய எஞ்சினீரிங் துறைகளில் பயிற்சியளிக்க இப்பொழுது மொத்தம் 25 எஞ்சினீயரிங் கல்லூரிகள் இந்தியாவில் உள்ளன. நான்கு கல்லூரிகளில், ரசாயன எஞ்சினீரிங் துறையில் பயிற்சி யளிக்கப்படுகிறது. இரண்டு கல்லூரிகளில், மின்சார செய்திப் போக்குவரத்து எஞ்சினீயரிங் பயிற்சிக்கும், ஒரு கல்லூரியில் உலோக இயல் எஞ்சினீரிங் பயிற்சிக்கும் ஒரு கல்லூரியில் ரஸ்தா அமைப்பு எஞ்சினீயரிங் பயிற்சிக்கும் வசதிகள் உள்ளன. இந்தப் படிப்புகள் பயிற்சி காலம் 3 வருஷம் முதல் 4 வருஷம் வரை பலவாறுயுள்ளன.

ஏற்கெனவேயுள்ள கழகங்கள் சமீபத்தில் விஸ்தரிக்கப்பட்டதன் மூலமும், புதிய கழகங்கள் அமைக்கப்பட்டதின் மூலமும் ஏராளமான மாணவர்கள் இத் துறைகளில் பயிற்சி பெறுவது சாத்தியமாயிருக்கிறதென்பது பின்வரும் புள்ளிவிவரங்களிலிருந்து நன்கு புலனாகும்.

| படிப்பு விபரம் | 1948–49–ல் பட்டம் பெற்றவர் | 1949–50–ல் சேர்த்துக் கொள்ளப்பட்டவர்கள் |
|---|---|---|
| (அ) எஞ்சினீரிங் | | |
| பட்டப்படிப்பு | 1 375 | 2,553 |
| டிப்பௌமா படிப்பு | 2,030 | 3,744 |
| (ஆ) தொழில் நுட்பப்பிரிவு | | |
| பட்டப் படிப்பு | 672 | 810 |
| டிப்பௌமாப் படிப்பு | 452 | 653 |

இவ்விதமிருப்பினும், இக் கழகங்கள் பலவித இடையூறுகளைச் சமாளித்து முன்னேற வேண்டியிருக்கிறது. சில கழகங்களில் மாணவர்கள் அதிகமாகச் சேர்த்துக்கொள்ளப் பட்டிருக்கின்றனர். ஆனால், போதிய பணமில்லாத காரணத்தால், புதிய கல்லூரிகளுக்குப் போதிய இடவசதி செய்து கொடுப்பதும், உபகரணங்கள் வாங்குவதும், சிப்பந்திகள் நியமிப்பதும் சாத்தியமில்லாமல் இருந்துவருகிறது. பழைய கல்லூரிகளுக்கு ஏற்பட்டுள்ள நிலைமையை சமாளிக்க, மத்திய சர்க்கார், ஏற்கெனவேயுள்ள கல்லூரிகளை விஸ்தரித்துப் பலப்படுத்துவதற்கான திட்டமொன்றை ஆரம்பித்திருக்கின்றனர். அகில இந்திய தொழில்நுட்பக்கல்விசபை, நிலைமையை விரிவாகப் பரிசீலனை செய்த பிறகு சிபாரிசு செய்துள்ள இத் திட்டத்தை நிறைவேற்றி வைக்க, சுமார் 150 லட்ச ரூபாய் ஆரம்பச் செலவும், 27 லட்ச ரூபாய் முறைச் செலவும் ஆகக்கூடுமென்று மதிப்பிடப்பட்டிருக்கிறது. மாணவர் விடுதிகள் கட்டுவதற்காக பயிற்சிக் கழகங்களுக்கு மொத்தம் 38 லட்ச ரூபாய் வரை, வட்டியில்லாக் கடன்கள் கொடுத்து உதவவும் இத் திட்டத்தில் வசதி செய்யப்பட்டிருக்கிறது. இதுவரை, 14 ஸ்தாபனங்களுக்கு 52,48,000 ரூபாய் ஆரம்பச் செலவுகளுக்காகவும், 10,98 875 ரூபாய் முறைச் செலவுகளுக்காகவும், 18,85000 ரூபாய் வட்டியில்லாக் கடன் தொகைகளாகவும் கொடுக்கப் பட்டுள்ளன.

## சுயானுபவப் பயிற்சி

கல்லூரிகளில் படித்துப் பட்டம் பெற்று வெளிவரும் மாணவர்களை, தொழில் துறையிலும், பிறவகையான விஞ்ஞான, தொழில் நுட்ப நடவடிக்கைகளிலும் பயன்படும் முறையில் வேலைகளில் ஈடுபட லாயக்குள்ளவர்களாக ஆக்குவது, தொழில் நுட்டக்கல்வி அபிவிருத்தி விஷயத்தில் மிகப் பெரிய பிரசினையாக இருந்துவருகிறது. கல்வி ஸ்தாபனங்களிலிருந்து வெளிவரும் மாணவர்கள் போதிய வேலைப்பயிற்சியும், அனுபவமும் பெற்றிருக்கவேண்டுமென்று தொழில் நடத்துபவர்கள், சர்க்காரும் சரி தனிப்பட்டவர்களும் சரி—விரும்புகின்றனர். கல்வி

(11-ம் பக்கம் பார்க்க)

# வெளியேருத அன்னியர் திட்டுப் பிரதேசங்கள்

பிரஞ்சு உடைமைப் பிரதேசமான சந்திரநாகூர் இவ் வருஷம் மே 2-ந் தேதியன்று இந்தியக் குடியரசுடன் ஐக்கியமானது, இந்தியாவிலுள்ள வெளிநாட்டு உடைமைப் பிரதேசங்களின் சரித்திரத்திலே மிக முக்கியமானதொரு நிகழ்ச்சியாகும். மற்ற பிரதேசங்களும் சீக்கிரத்திலேயே இந்தியாவுடன் சேர்க்கப்பட்டுவிட வேண்டுமென்று அந்தப் பிரதேசங்களில் வாழும் மக்கள் துடியாகத் துடித்துக் கொண்டிருந்தாலுங்கூட ஆட்சியாளரின் தில்லுமல்லுகள் காரணமாக அப்பிரதேச மக்களின் அபிலாஷை இன்னமும் நிறைவேறாமலே இருந்துவருகிறது.

இந்தியாவில் பிரெஞ்சு உடைமைப் பிரதேசங்களாக இருந்துவரும் புதுச்சேரி, காரைக்கால், யேனும், மாஹி ஆகிய பகுதிகளும், சந்திரநாகூரும் இந்தியாவுடன் சேர்க்கப்பட்டுவிட வேண்டுமென்று 1947 ஆகஸ்டில் இந்தியா சுதந்திரமடைந்தவுடன் அந்தப் பிரதேச வாசிகளும் இந்திய மக்களும் கோரினர். அதையொட்டி இந்திய சர்க்காருக்கும் பிரெஞ்சு சர்க்காருக்குமிடையே பேச்சுவார்த்தைகள் நடைபெற்றன. இந்தியாவிலுள்ள பிரெஞ்சுப் பிரதேசங்களில் வசிப்பவர்கள் தாங்கள் பிரெஞ்சு ஆட்சியின்கீழ் நீடித்து இருப்பதா அல்லது இந்தியாவுடன் சேருவதா என்பதைத் தாங்களே முடிவுசெய்து கொள்ள அனுமதிக்கப்படுவார்கள் என்று, பிரெஞ்சு சர்க்கார் 1948 ஜூனில் ஒரு பிரகடனம் வெளியிட்டனர். பொதுஜன வாக்களிப்புக்கான ஏற்பாடுகளை இரு சர்க்கார்களும் கலந்துபேசி முடிவு செய்யும். இருதரப்பினரும் உள்ளிருந்தோ வெளியிலிருந்தோ எவ்வகையிலும் ஜனங்களை நிர்ப்பந்திக்கக்கூடாது; பிரெஞ்சு உரிமைப் பிரதேசங்களிலுள்ள எல்லா நகரசபைகளையும் கலைத்துவிட்டு புதிதாகத் தேர்தல் நடத்தப்படும். புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட சந்திரநாகூர் நகரசபை தனியாகவும், மற்ற நான்கு நகரசபைகளும் கூட்டாகவும் சந்தித்து, பொதுஜன வாக்கு கணிப்பு நடத்துவதற்கான தேதியை நிர்ணயம் செய்யும். வாக்கு கணிப்புக்குக் கையாளவேண்டிய நடைமுறைகளையும் இந்த சபை சிபார்சு செய்யும் என்று அந்தப் பிரகடனத்தில் கூறப்பட்டிருந்தது.

பிரெஞ்சு சர்க்காரால் ஒப்புக்கொள்ளப்பட்ட இந்த சுயநிர்ணய உரிமை, உள்ளூரில் பலவிதமான நிர்ப்பந்த முறைகளைக் கையாளுவதன் மூலமும், கட்டுப்பாடுகளை ஏற்படுத்துவதன் மூலமும் குலைக்கப்பட்டுவருவதாக, பிரெஞ்சு இந்தியப் பிரதேசங்களில் பிறபாடு நிகழ்ந்த சம்பவங்களிலிருந்து தெரியவந்தது. ஆகவே, 1948 அக்டோபரில் நடத்த ஏற்பாடு செய்யப்பட்டிருந்த நகரசபைத் தேர்தல்களை ஒத்திப்போட வேண்டுமென்று இந்திய சர்க்கார் பிரெஞ்சு சர்க்காரைக் கேட்டுக் கொண்டனர். இந்தியாவின் பிரதம மந்திரி பாரிஸில் பிரெஞ்சு சர்க்காரைச் சந்தித்துப் பேசிய போதும் இந்தத் தேர்தல்களை ஒத்திப்போட வேண்டுமென்றும், தேர்தல்களின்போது அங்கு பிரசன்னமாயிருக்க நடுநிலைமைப் பார்வையாளர்களை நியமிக்க வேண்டுமென்றும் வற்புறுத்திக் கூறினார். தேர்தல்கள் ஒழுங்காக நடைபெறுமென்று பிரெஞ்சு மக்களுக்கு உறுதியளிக்கும் பொருட்டு இவ்விரு நடவடிக்கைகளும் மேற்கொள்ளப்பட வேண்டுமென்று யோசனைகூறப்பட்டது. இவ்விரு யோசனைகளையும் பிரெஞ்சு சர்க்கார் ஏற்றுக்கொள்ளவில்லை. புதுச்சேரி, காரைக்கால், யேனும், ஆகிய இடங்களில் 1948 அக்டோபர் 24-ந் தேதியன்று தேர்தல்கள் நடத்தப்பட்டன. பிரெஞ்சு சர்க்காரை ஆதரிப்பவர்கள் பயங்கரச் செயல்களில் இறங்கியதால், காரைக்கால் காங்கிரஸ் நகரசபைத் தேர்தல்களை பகிஷ்கரிக்கும்படி நேர்ந்தது. தேர்தலின்போது மாஹியில் கடுமையான கலவரங்கள் ஏற்பட்டன. இந்தப் பிரதேசத்தில் ஒழுங்கை நிலைநிறுத்த பிரெஞ்சு சர்க்கார் துருப்புகளை உபயோகித்தனர். மாஹி கடற்கரைக்கப்பால் பிரெஞ்சுக் க்ருய்ஸர் கப்பல் ஒன்றையும் நிறுத்தி வைத்திருந்தனர். பிரபல பிரெஞ்சிந்திய அரசியல் தலைவர்கள் பலர் உட்பட, ஏராளமான மக்கள் இந்தியப் பிரதேசங்களில் தஞ்சம் புகுந்தனர். இவ்வாறு வெளியேறிவந்தவர்கள், மாஹி தேர்தல்களில் கலந்துகொள்ள அனுமதிக்கப்பட வேண்டுமென்று, பின்னர் இந்திய சர்க்கார் யோசனை கூறினர். ஆனால் அவர்கள் அவ்வாறு செய்ய அனுமதிக்கப்படவில்லை. தேர்தல்கள் மீண்டும் 1949 பிப்ரவரியில் நடத்தப்பட்டன. பிரெஞ்சு சர்க்காரை முற்றிலும் ஆதரிக்கும் கட்சி தேர்தலில் வெற்றிபெற்று நகரசபையில் அமர்ந்தது.

புதுச்சேரி, காரைக்கால், யேனும், மாஹி ஆகிய நகரசபைகள் ஒன்றுகூடி, 1949 டிசம்பர் 11-ந் தேதியன்று பொதுஜன வாக்கு கணிப்பதென்று தீர்மானித்து, அதற்கான முக்கிய நடைமுறைகளையும் சிபாரிசு செய்தன. நகரசபைத் தேர்தல்கள் முன்னேற்பாட்டுடன் நடத்தப்பட்டதுபோல, இந்தப் பொதுஜன வாக்கு கணிப்பும் நடத்தப்பட்டுவிடுவதைத் தவிர்க்கும்பொருட்டும், ஒவ்வொருவரும் தம் விருப்பப்பிரகாரம் வாக்களிக்க சுதந்திரமிருக்கும்படி செய்யும்பொருட்டும் பொதுஜன வாக்கு கணிப்புக்கு தக்க ஏற்பாடுகள் செய்யப்படவேண்டுமென்று இந்திய சர்க்கார் பிரெஞ்சு வெளிவிவகாரக் காரியாலயத்திடம் வற்புறுத்திக் கூறினர். நீண்ட கடிதப் போக்குவரத்தும், பாரிஸில் இதுபற்றிய விவாதமும் நடைபெற்ற பிறகு, வாக்கு கணிப்பு நடைபெறும்போது, இரு சர்க்கார்களும் ஏற்றுக்கொண்ட நடுநிலைமைப் பார்வையாளர்கள் நியமிக்கப்படவேண்டுமென்று ஒப்புக்கொள்ளப்பட்டது. ஆனால், பிரெஞ்சு சர்க்கார், இந்த ஒப்பந்தத்தைப் புறக்கணித்துவிட்டு, வாக்கு கணிப்புக்கு அதிக முக்கியமான நடவடிக்கையான, வாக்காளர் ஜாபிதா திருத்த வேலையை, நடுநிலைமைப் பார்வையாளர்கள் இல்லாமலேயே ஆரம்பித்துவிட்டனர். இதுபற்றி மீண்டும் எடுத்துக் கூறியதன் பலனாக, வாக்காளர் ஜாபிதா தயாரிப்புக்கான இந்த ஆரம்ப வேலைகள் முடிவடைந்த பிறகு நடுநிலைமைப் பார்வையாளரின் முன்னிலையில் இவை திருத்தியமைக்கப்பட வேண்டுமென்று ஒப்புக்கொள்ளப்பட்டது.

பொதுஜன வாக்கு கணிப்புக்கு ஏற்பாடுசெய்வதில் மூன்று விஷயங்கள் முதன்மையாகக் கவனிக்கப்படவேண்டும். (1) பொதுஜனங்களிடம் தங்கள் கட்சியை எடுத்துரைக்க எல்லா அரசியல் கட்சிகளுக்கும் பூரண சுதந்திரம் இருக்கவேண்டும்; (2) பிரெஞ்சு சர்க்காரில் அல்லது ஸ்தல நிர்வாகத்தில் ஊதியம் பெற்று உத்தியோகம் வகித்துவரும் நபர்கள் தேர்தல் பிரசாரத்தில் கலந்துகொள்ள அனுமதிக்கப்படக்கூடாது; (3) விடுதலை அளிப்பதாக வாக்குறுதியளிக்கப்பட்டுள்ள அரசியல் அகதிகள் அனைவரும், தத்தம் இடங்களுக்குத் திரும்பிச் சென்று அரசியல் இயக்கங்களில் கலந்துகொள்ள அனுமதிக்கப்படவேண்டும்.

இந்திய சர்க்கார், 1941-ம் வருஷத்திய சுங்க யூனியன் ஒப்பந்தத்தை 1950 ஏப்ரலில் ரத்து செய்ததின் மூலம், பிரெஞ்சிந்திய மக்கள் மீது பொருளாதார நிர்ப்பந்தத்தை ஏற்படுத்திவிட்டனரென்றும், இது 1948 ஜூனில் செய்துகொள்ளப்பட்ட ஒப்பந்தத்திற்கு முரணான செய்கையென்றும் பிரெஞ்சு சர்க்கார் இந்திய சர்க்கார் மீது பழி சுமத்த முயன்றனர். யுத்தத்தின்போது, 1941-ல், இந்திய சர்க்காருக்கும் பிரெஞ்சு இந்திய அதிகாரிகளுக்குமிடை சுங்க ஒப்பந்தம் ஒன்று ஏற்பட்டிருந்தது. அந்த ஒப்பந்தத்தின் பிரகாரம் இந்திய சர்க்கார் பிரெஞ்சிந்தியசர்க்காருக்கு வருஷா வருஷம் 6.20.000 ரூபாய் மானியம்கொடுத்து வந்தனர். பிரெஞ்சிந்தியப் பிரதேசம் முழுவதிலும் சுங்க அதிகாரத்தை அவர்கள் இந்திய சர்க்காரிடம் ஒப்படைத்திருந்தனர். ஏற்றுமதி, இறக்குமதி வர்த்தகத்தையும் சுங்கக் கட்டுப்பாடுகளையும் பொறுத்தமட்டில் பிரெஞ்சிந்தியப் பிரதேசம் இந்தியாவின் ஒரு பகுதியாகவே இருந்து வந்தது. ஒரு வருஷ முன் அறிவிப்பில் ஒப்பந்தத்தை ரத்து செய்துகொள்ளலாமென்றும் ஒப்புக்கொள்ளப்பட்டிருந்தது. 1948 மார்ச்சில், அதாவது பிரெஞ்சு சர்க்காரின் ஜூன் பிரகடனத்துக்கு முன்னால், இந்திய சர்க்கார், அந்த ஒப்பந்தம் ஏற்பட்டபோதிருந்த நிலைமை மாறிவிட்டபடியால், ஒப்பந்தத்தை ரத்து செய்துவிடலாமென்று கூறி பிரெஞ்சு சர்க்காருக்கு ஒரு வருஷ நோட்டீஸ் கொடுத்தனர். அந்த அறிவிப்புக்குப் பிறகு கிட்டத்தட்ட

[7-ம் பக்கம் பார்க்க]

# தென்னிந்திய வர்த்தகம் (1)

"பாண்டியன்"

தென்னாடு, வடநாடு என்று ஏதாவது பேசினால் அதைக் குறுகிய மாகாணப் பித்து என்று கூறி நம்மை அடக்கிவிடப் பார்க்கிறார்கள். எதையும் அகில இந்திய ரீதியில் வைத்துப் பார்ப்பதுதான் தேசீயம் என்று கருதுகிறவர்களைப் பற்றி எனக்கு வருத்தமில்லை. ஏனென்றால் தேசீயம் பேசுகிற தோழர்கள் பெரும்பாலும் அரசியல் வாதிகள். அதாவது அந்த இஸம் இந்த இஸம் என்று எதையாவது மேடையதிரப் பேசிவிட்டு பூமாலைகளையும் புகழ் மாலைகளையும் சுமந்து கொண்டு அடுத்த பிரசங்கத்திற்குத் தங்களை தயார் செய்து கொள்ளும் அளவுக்கு மட்டுமே தேசீயம் படித்திருப்பவர்கள் இவர்கள். இவர்கள் மேல் குறை சொல்லிப் பயனில்லை.

ஆயிரம் உண்டிங்கு ஜாதி, எனில் அன்னியர் வந்து புகலென்ன நீதி? என்று கேட்கும் போது, வெளியார் நம்முடைய விஷயத்தில் தலையிடக் கூடாது என்பதுதான் அதற்குப் பொருளே தவிர, நமக்குள் ஆயிரம் வேற்றுமைகள் இருக்கத்தான் வேண்டுமென்று நாம் கருதுவதாக அர்த்தம் இல்லை.

இமய முதல் குமரி யீறாக இரு மருங்கிலும் பெரிய கடல்களை எல்லையாகப் பெற்ற இந்தப் பரந்த மண்ணில் பிறந்தவர் தவிர மற்றவர்கள் யாருக்கும் இங்கே ஆதிக்கம் செலுத்தும் உரிமையில்லை யென்ற அடிப்படையில் தான் நமது தேசீய வாதம் பிறந்தது. நமக்குள் இருக்கும் மதம், இனம், மொழி மாகாணம் ஆகிய பிரிவினைகளைக் காரணமாகக் காட்டி வெளியார் இங்கே வேரூன்றக் கூடாது என்றுதான் நாம் தேசீய வாதம் புரிந்தோம், போராடினோம், வெற்றியும் பெற்றோம். ஆனால் நமக்குள் ஜாதிக்கு ஜாதி, மாகாணத்துக்கு மாகாணம், இனத்துக்கு இனம், மொழிக்கு மொழி சுரண்டிக்கொண்டுதான் இருப்போம்; அதை யாரும் கேட்கக் கூடாது என்று அல்ல.

வெள்ளைக்காரன் இருந்த போதும், அவன் வருமுன்பும், அவன் போய்விட்ட பிறகும்கூட நம்மில் வேற்றுமைகளுக்குப் பஞ்சமில்லை. வேற்றுமைகளால் தான் நாம் வீழ்ந்தோம் என்ற உண்மையை உணர்ந்துதான் வேற்றுமை போக்கி அகில இந்திய ஒருமைக்கான தேசீய வாதம் பேசி, நடக்கவும் ஆரம்பித்தோம்.

விடுதலை வந்துவிட்ட பிறகு கூட நமது வேற்றுமைகளை மறந்துவிடக்கூடிய பரந்த லட்சியத்தில் காரியங்கள் நடைபெறக் காணோம். சந்தர்ப்ப வசத்தால் தேசத்தின் பொது அதிகார வசதிகளைப் பயன்படுத்திக் கொள்ள வாய்ப்புப் பெற்றவர்கள், தங்களையறியாமலே, தங்களுக்குள் பதுங்கிக் கிடந்த மொழிப்பற்று, மாகாணப்பித்து இனப்பற்று, இப்படி வேற்றுமைப் பேய்களுக்கு இடம் கொடுத்து வருகிறார்கள். ஆயினும் தங்களை எதிர்ப்பவர்களை அடக்கி விடுவதற்கு மட்டும் அகில இந்திய தேசீய வாதம் பேசுகிறார்கள்.

வெறும் தத்துவங்களைக் காட்டி மாகாணத்துக்கு மாகாணம் ஓரவஞ்சனையாக நிர்வாகம் நடைபெறுமானால் தேசீயம் நிலைக்காது. கிடைத்துவிட்ட சுதந்திரத்தில் அவரவர் தங்கள் 'வேற்றுமை அடிப்படையில் விகிதாசாரமாவது கிடைக்கட்டும் அவிபக்த குடும்பமாக வாழ அண்ணன் இடையூறாக இருக்கிறான்" என்று தான் எண்ண ஆரம்பித்துவிடுவார்கள்.

ஃ ஃ ஃ

இதோ ஒரு செய்தி கிடைக்கிறது:—

"வெளி நாடுகளிலிருந்து குறிப்பிட்ட சிலபொருள்களை இறக்குமதி செய்துகொள்ள விரும்புவோர் கட்டுப்பாடின்றி தேவையானதை வரவழைத்துக் கொள்ளும் பொது அனுமதி(ஓபன் ஜெனரல் லைசென்ஸ்) ஒன்றை சமீபத்தில் மத்ய அரசாங்கம் வெளியிட்டது. இந்த உத்திரவு சென்னைக்கு ஆகஸ்ட் 15-ல் கிடைத்தது. உடனே தென்னாட்டு வியாபாரிகள் ஆவலுடன் வெளிநாடுகளிலுள்ள ஏற்றுமதியாளர்களுக்கு ஆர்டர் கொடுத்தார்கள். ஆனால் அதற்கு முன்பே வடநாட்டு வியாபாரிகளுக்கு சப்ளை செய்துவிட்டதால் சரக்கு கைவசமில்லை என்று வெளிநாட்டு வணிகர் கைவிரித்து விட்டார்கள். பொது அனுமதியினால் தென்னாட்டு வணிகர் பயன்பெற முடியவில்லை"

தமிழ்நாடு வர்த்தக சம்மேளனம் இந்தத் துயரச் சேதியை மத்ய சர்க்காருக்கு அறிவித்துக் கொண்டிருக்கிறது. இந்தமாதிரி அனுமதிகள் சென்னைக்கு எட்டு முன்பே வடநாட்டு வியாபாரிகளுக்கு கிடைத்து விடுகிறது. அதன் வசதிகளை அவர்கள் முற்றிலும் பயன்படுத்திக் கொண்ட பிறகு ஒப்புக்குத் தென்னாட்டுக்கும் தகவல் கொடுக்கப்படுகிறது என்று இதைக் கொள்ளலாமா, கூடாதா என்று நீங்களே சிந்தனை செய்யுங்கள்.

"இது ஏதோ வியாபாரிகள் விஷயம், பொதுமக்களுக்கு இதனால் தீமை ஒன்றுமில்லை. இதைப் பிரமாதப்படுத்தி மாகாண வாதம் பேசுவது சரியல்ல" என்று தேசியவாதி நம்மைக் கண்டிக்கக்கூடும். பாவம் அவருக்கு, காங்கிரஸ்காரர்கள் இப்போது மந்திரிகளாகப் பாவாடை ராயர்கள் புடைசூழப் பவனிவருவதுதான் தெரியுமே தவிர அதற்குமேல் நிர்வாகச் சக்கரம் நமது வாழ்வை எப்படி சுழற்றுகிறதென்று அறிந்து கொள்ள வசதியுமில்லை. அதற்கான சிரத்தையும் இல்லை. வந்தேமாதரம் என்றோ, காந்திக்கு ஜே என்றோ அல்லது ஜே ஹிந்த் என்றோ உரத்துக் கோஷமிட்டால் எல்லா வேற்றுமைகளும் வீழ்ந்துவிடு மென்பதற்குமேல் அரசியல் அவருக்குத் தெரியாது. அவரை மறந்துவிட்டு மற்றொரு கணக்கைப் பார்ப்போம்.

ஃ ஃ ஃ

டாலர் நெருக்கடி என்று சொல்லுகிறார்களே அது என்ன தெரியுமா? உலகப் பொருளாதாரச் சந்தையை இன்று அமெரிக்கா ஆட்டிவைத்துக்கொண்டிருக்கிறது. நம்முடைய தேசத்தின் நாணயம், பிரிட்டிஷ் பவுன் நோட்டுடன் இணைந்திருக்கிறது. பிரிட்டிஷ் பவுன் நோட்டு அமெரிக்க டாலருடன் சம்பந்தப்பட்டிருக்கிறது.

போனவருஷம் வரையில் இங்கிலாந்தின் ஒரு பவுன் நோட்டுக்கு (ஸ்டெர்லிங் என்பது) அமெரிக்க டாலர் 4-ம் சென்ட் 2-ம் சமமாக இருந்து வந்தது. போன அக்டோபரில் அமெரிக்கா தங்கள் நாணய மதிப்பை உயர்த்திவிட்டார்கள். அதாவது இங்கிலாந்தின் ஒரு பவுன் நோட்டுக்கு இனிமேல் 2 டாலர் 20 செண்ட்தான் மதிப்பு என்று மாற்றி விட்டார்கள்.

இந்த மாறுதல் வரும் வரையிலும் அதற்குப் பிறகும் கூட நம்முடையநாணயத்திற்கும்இங்கிலாந்து நாணயத்துக்கும் உள்ள தொடர்பு மட்டும் ஒரே மாதிரியாகவே வைத்துக்கொண்டிருக்கிறோம். அதாவதுநம்முடைய ரூ. 13-5-4 கொடுத்தால் இங்கிலாந்தின் ஒரு பவுன் நோட்டுக்குச் சமம். அதன்படி போன வருஷத்து மாறுதல் ஏற்படும் வரையில் நமது ரூ. 13-5-4க்கு அமெரிக்க டாலர் 4 செண்ட் 2 சமமாக இருந்தது. மாறுதலின் காரணமாக, 2 டாலர் 20 செண்ட் ஆகிவிட்டது.

முன்பு அமெரிக்காவிலிருந்து 4 டாலர் 2 செண்டுக்கு ஒரு சாமான் நாம் வாங்கினால் ரூ. 13—5—4 கொடுத்தால் போதும். இப்போது அதே சாமானுக்கு ரூ. 17- சொச்சம் செலுத்தவேண்டும்.

இதன்படி அமெரிக்க சாமான் நமக்கு விலையேறி விட்டது. எதற்காக இதை நாம் ஒப்புக்கொண்டோமென்றால் அமெரிக்காவிலிருந்து நாம் அதிகமாக சாமான்களை வாங்காமல் இருப்பதற்காக. அவசியமான சாமான்களை மாத்திரம் இறக்குமதி செய்து கொள்வதன் மூலம் நமது பொருளாதாரத்தை சிக்கனப்படுத்துவது இதன் நோக்கம்.

ஒரு சாமான் அமெரிக்காவிலும் இங்கிலாந்திலும் கிடைக்கும்போலிருந்தால் நாம் அதிக விலைகொடுத்து அமெரிக்காவிலிருந்து வாங்கமாட்டோம். இங்கிலாந்திலிருந்து வாங்கிக் கொள்வோம். இதனால் இங்கிலாந்தின் வியாபாரம் அதிகமாகும் என்பதும் அமெரிக்காவுடன் நம்முடைய வியாபாரம் குறையும் என்பதும் புரிகிறதல்லவா?

நம்முடைய நாணயச் செலாவணியை இங்கிலாந்துடன் நாம் பிணைத்திருக்கிறோம். நமக்கு ஒரு சாமான் தேவைப்பட்டு அது அமெரிக்காவில் மட்டும் கிடைக்குமென்றால் நமக்குத் தேவையான டாலர் வசதியை இங்கிலாந்து தன் கணக்கில் வாங்கிக்கொடுத்து, நமக்கு இங்கிலாந்து தரவேண்டிய கடனில் பற்று எழுதிக்கொள்ளும். தனனிடமே நமக்குத் தேவையான சாமான் கிடைத்தாலும் அதை நமக்கு சப்ளை செய்து விட்டுப் பற்று எழுதிக்கொள்ளும். எனவே அவசியமான பொருளுக்கு மட்டும் இவ்வளவு டாலர்களுக்குள் நாம் வாங்கிக்கொள்ளலாமென்ற ஒரு அளவை நாம் ஏற்றுக் கொண்டிருக்கிறோம். ஆக, அவசியமான பொருளுக்கு மட்டுமே டாலர் வசதியை நாம் செலவிடவேண்டும்.

ஃ ஃ ஃ

மத்யசர்க்கார்தான் இறக்குமதிக்கு டாலர் லைசென்ஸ்தருகிறார்கள். இந்த லைசென்ஸுகளுக்கு எல்லா மாகாணத்திலிருந்தும் வியாபாரிகள் மனுச் செய்து கொள்கிறார்கள். யந்திரங்கள் போன்ற முக்கியமான சாமான்களுக்குக் கிடைக்கும் லைசென்ஸுகள் சென்னை மாகாணத்துக்கு சரியாகக் கிடைப்பதில்லை. சோப், சீப்பு, ரப்பர், பென்சில், புஸ்தகங்கள் இப்படி சாமான்களுக்குத்தான் சென்னை மாகாணத்துக்குக் கிடைத்து வருகிறது. பொதுவாக இப்படிக் கூறிவிட்டால் வேண்டுமென்று ஏதோ குதர்க்கம் பேசுவதாகத் தோன்றக் கூடும். புள்ளி விபரங்களுடன் அடுத்த வாரம் ஆராய்வோம்.

# அமார்நாத் குகைக்கோயில்

## சந்திரப் பிறைபோல் தேய்ந்து வளரும் பனிக்கட்டி சிவலிங்கம்

ஆகஸ்ட் 27உ பௌர்ணமி தினத்தன்று காஷ்மீர் பனிமலைகளிலுள்ள புகழ்மிக்க அமரநாத் குகைக்கோவிலுக்கு இந்தியாவிலிருந்து ஆயிரக்கணக்கான யாத்திரிகர்கள் சென்று அங்குள்ள சிவலிங்கத்தை சேவித்து வருவார்கள். கடல்மட்டத்திலிருந்து சுமார் 13000 அடி உயரத்திற்கு மேல் காஷ்மீரின் கிழக்குமலை வரிசைகளில் உள்ள உருகுபனிப் பள்ளத்தாக்கில் இருக்கும் அமரநாத் கோயிலுக்கு ஆகஸ்ட் மாதத்தில்தான் வழி திறந்திருக்கும். செப்டெம்பரிலிருந்து ஜூன் வரையில் அது பனி மூடிக்கிடக்கும்.

இக்குகை வாயில் "ஐம்பது கஜ நீளமும் ஐம்பது கஜ அகலமும் இருக்கும். மத்தியில் அகலம் முப்பது அடி" குகைக்குள்ளே மூலஸ்தானத்தில் பனிக்கட்டியாலான சிவலிங்கம் இருக்கிறது. இந்த சிவலிங்கம் யாராலும் கைகொண்டு செய்யப்படாததாய் தானே தோன்றியதாய் விளங்குகிறது. குகை உச்சியிலிருந்து சொட்டுச்சொட்டாய் விழும் தண்ணீர் இறுகி சிவலிங்கமாய் விடுகிறது. இந்தப் பனிக்கட்டிச் சிவலிங்கம் சந்திரன் தேய்ந்து வளருவதை அனுசரித்துத் தானும் தேய்ந்து வளருவதாகத் தெரிகிறது. பௌர்ணமி அன்று அது முழு வளர்ச்சி பெறுகிறதாகையால் ஆவணி மாதத்தில் மாதத்துப் பௌர்ணமி விசேஷ தினமாகக் கருதப்பட்டு ஒவ்வொரு வருஷமும் யாத்திரிகர்கள் வந்து தொழும் விழா நாளாக விளங்குகிறது.

குகையின் தென்கிழக்கு மூலையில் ஒரே சமயத்தில் நூற்றுக்கணக்கான பேர்கள் நிற்கக்கூடிய இடத்தில் யாத்திரிகர்கள் திரண்டு நின்று சுயம்பு லிங்கத்தை வணங்குவார்கள். பூஜை நேரத்தில் புறுக்கள் குகை மேலே பறக்கும்.

ஸ்ரீமதி பெர்சி ப்ரௌன் என்னும் ஆசிரியர் "அமார்நாத் யாத்திரை"யில் அவர் பின்வருமாறு பாடுகிறார்:-

ஓங்கு பனிமலை உச்சியிலே—மாயம்
 உறைந்திடும் குகையதன்
 மோனத்திலே
புனிதச் சந்நிதிச் சூழலில்-வெள்ளைப்
 புறவொன்று பறந்து திரிகின்றதே
கொடும் வெயில் காயும்
 சமவெளியில்—மக்கள்
 குளிர் நிழல் நாடிடும் பாரதத்தில்
இமயச் சிகரத்தின் தண்மையினை
 —அந்த
 இறைவன் அருள்நிழல்
 இருக்கையினை
எத்தனைபேர் நினைந் தேங்குவரோ
 —தினம்
 எத்தனை பேர் கனக் காணுவரோ!

பூஜை அரைமணி நேரத்திற்குள்ளாகவே முடிந்துவிடுகிறது. ஆனால், எத்தனைபேர் இன்னல்களுக்கும் கஷ்டத்துக்கும் ஆளாகி அருந்தியாகம் செய்து மேற்கொள்ளப்படும் இந்த யாத்திரையானது பக்தர்களுக்கு எவ்வளவோ முக்கியத்துவமுள்ளதாக விளங்குகிறது. இந்த அமார்நாத் கோயிலுக்கு வந்து கும்பிடுவதன் மூலம் தாங்கள் அழியாத வாழ்வு பெற்று ஆத்மா மோக்ஷமடையும் என்று அவர்கள் நம்புகிறார்கள்.

குகைக்கு இரண்டு பாதைகள் இருக்கின்றன; ஒன்று பகால்காம் வழி செல்கிறது; மற்றொன்று பால்டால் வழியே செல்கிறது. பிரயாணிகள் சாதாரணமாகச் செல்லும் பகால்காம் வழிதான் அதிகக்கஷ்டமான பாதை. எவ்வளவுக்கு எவ்வளவு அதிகக் கஷ்டத்துடன் அங்கே செல்கிறோமோ அவ்வளவுக்கு அவ்வளவு புண்ணியம் அதிகம் என்பது யாத்திரிகர்கள் நினைப்பு.

இதற்குள்ளாக யாத்திரிகர்கள் பகால்காம் போவதற்குப் புறப்பட்டிருப்பார்கள். அமாவாசை கழிந்து ஏறக்குறைய பதினொருநாள் ஆகும்போது அவர்கள் ஒரே கூட்டமாக சந்தணவாரி (9,500 அடி) என்றும் முதல் கட்டத்தை நோக்கி புறப்படுவார்கள்.

அங்கிருந்து ஏழு மைல் தூரமுள்ள வால்ஜான் செல்வதுதான் இரண்டாது கட்டம். வால்ஜாவிலிருந்து சேஷ்நாக ஏரி ஒரு மைல் தூரத்தில்தான் இருக்கிறது. ஏரியைச் சுற்றி மனோரம்மியமான காட்சியைக் காணலாம். ஏரியைச் சூழ்ந்து மூன்று புறங்களும் சதா பனி கனிந்து நிற்கும் உன்னத மலை வரிசைகள் விளங்குகின்றன.

மூன்றுவது நாள் யாத்திரிகர்கள் பத்து மைலுக்கு அப்பாலுள்ள பஞ்சதரணி (12,792 அடி) என்னுமிடத்துக்குச் செல்வார்கள். பஞ்சதரணியிலிருந்து அமார்நாத் குகை 5 மைல் தூரத்தில்தானிருக்கிறது. அங்கிருந்து அவர்கள் குகைபோய்ச் சேருவார்கள்.

பிரயாணிகள் திரும்பும்போது வருகிற இன்னொரு பாதை சுருக்கமான வழி; அந்தப் பாதை வழியாக ஸ்ரீநகருக்கு 71 மைல் தூரம்தான் உண்டு. ஸ்ரீநகரிலிருந்து பால்டால் வரையில் (59 மைல்) நல்ல சாலை அமைக்கப்பட்டிருக்கிறது. அங்கிருந்து அமார்நாத் 12 மைல் தூரம்தான்; இதில் சங்கம் என்னுமிடத்திலிருந்து அமார்நாதுக்கு 3 மைல் தூரத்துக்கு ஏற்கனவே ரஸ்தா இருக்கிறது. பால்டால் முதல் சங்கம் வரையில் மீதியுள்ள 9 மைல் தான் ரஸ்தா இல்லாத இடம். இந்த ஒன்பது மைலும் உருகு பனித்திடல்களாக இருக்கும்; ஜூலையில் இந்தப் பனித்திடல் உருகிவிட்டபின் யாரும் செல்ல முடியாது. மார்க்கத்தில் ஒரேயொருநாள்தான் பியாணிகள் அபாயகரமான வனுந்தரப்பாதையில் செல்லவேண்டியிருக்கும்! இந்த மார்க்கத்தில் பனித்திடலுக்கு இப்பக்கத்தில் நில்கிரார் கிராமம் வரையில் மக்கள் குடியாட்டம் உண்டு. பால்டால் வரையில் உள்ள ஆறு மைல் தூரத்துக்கு மரங்களும் உண்டு; நிழலுக்கும் விறகுக்கும் அவை உதவும்,

நவீன போக்குவரத்து வசதிகள் இருக்கும் இக்காலத்தில் அமார்நாத் குகைக்குச் செல்வது பெருங்கஷ்டமல்ல. காஷ்மீர் சமஸ்தானம் பிரயாணிகளுக்கு வேண்டிய எல்லா சௌகரியங்களையும் செய்து தருகிறது. யாத்திரிகர் கூட்டத்தோடு ஒரு டாக்டரும் மாஜிஸ்ட்ரேட்டும் இதர அதிகாரிகளும் வருகிறார்கள்.

அதிக வைதிகமானவர்கள் இன்றுங்கூடப் பூரா வழியையும் நடந்தே கடக்க விரும்புகிறார்கள்; ஆனால் சாதாரண மக்கள் கார், குதிரை அல்லது வேறெது எது கிடைக்குமோ அதை உபயோகித்துக் கொள்கிறார்கள். பெரும்பாலான பிரயாணிகளும் காரிலோ குதிரையிலோ சவாரி செய்ய முடியாத ஏழைகள் தான். அவர்களில் பெரும்பாலோர் ஆடையில்லாத சாதுக்கள்; பருவ மாறுபாடுகள் உடலைப்பாதிக்கும்படி விட்டு அனுபவம் உள்ளவர்கள். ஆனால் தேக சௌக்கியம் இப்படிக் குறைவு படுவதற்கு ஈடாக அவர்களுக்கு நம்பிக்கையின் மூலம் ஆத்ம திருப்தி கிடைக்கிறது.



அறவலி காத்துநாளும் அன்னையின் பணிக்கென்றே—நம்
உறையிலே உறங்கும் வீரம் உருவினும் ஓங்கிவிட்டோம்.

திருச்சி 27—8—50

# இயற்கை வைத்தியம்.

மருத்துவர் மூளைக்கே பிடிபடாத வியாதிகள் உண்டு: சாதாரணமான பத்தியங்களில்கூட இவை தீர்ந்துவிடவும்கூடும். அப்படிவிட்டுவிட மருத்துவருடைய அந்தஸ்து இடம் கொடுக்காது. உயிர் போகும்வரையில் பயப்படவேண்டாமென்றே சொல்லிக் கைவிரித்துவிடுவது மருத்துவக் கௌரவம். வைத்தியர் கைவிட்டுவிட்ட நோயாளிகள் மருந்து ஒன்றுமில்லாமல் கொஞ்ச நாளில் பிழைத்து நடமாடுவதும் உண்டு.

இயற்கை வைத்தியத்தில் நம்பிக்கையுள்ளவர்களும் மருத்துவ முறைகளில் ஒன்றும் பயன்காண முடியாதவர்களும், கிட்டத்தட்ட இயற்கையின்மீது பாரம் போட்டுவிட்டுச் சும்மா இருப்பதுதான் ஒரேவழி என்ற முடிவுக்கு வந்துசேருகிறார்கள்.

நமது மாகாணத்து உணவு நிலைமை இயற்கை வைத்திய முடிவுக்கு வந்துசேரவில்லை. ஆனாலும் மருத்துவம் சுகமில்லை. வெளிநாட்டிலிருந்து உணவுப் பொருள் கொண்டுவருவது ஒன்றுதவிர உள்நாட்டில் நிலைமையை அபிவிருத்தி செய்ய சர்க்கார் கையாளும் முறைகள் பயன்படும்போலத் தோன்றவில்லை. பொதுமக்கள் எப்படியாவது சமாளித்துக்கொள்வார்கள் என்று இயற்கை வைத்தியம் செய்துபார்க்கலாமா என்று யோசிக்கவேண்டியதுதான்.

உணவுப்பொருளை கொண்டுவந்து போடமுடியாமல் உலகம் பூராவுமே பஞ்சம் வந்து விட்டதென்று அல்ல. பஞ்சம் பஞ்சம் என்று பதறிக்கொண்டிருக்கும் இந்நாளில் கள்ளமார்க்கெட்டில் அரிசி எப்படிக் கிடைக்கிறது என்பதை யாரும் சிந்திப்பதாகவே தெரியவில்லை. கிராமங்களில் அரிசி கிடைக்காமல் போகிற காரணம் இருப்பவர்கள் மூன்று மாதத்துக்காகவாவது கையிருப்பு வைத்துக்கொள்ள விரும்புவதும், கிராமத்தில் வியாபாரம் அவ்வளவு ஜோராகச்செய்ய முடியாமல் போவதாலும் எந்த நேரத்திலும் கொள்முதல் உபத்திரவம் வந்துவிடலாமென்ற அச்சத்தாலும் நகரங்களில் வந்து கள்ளமார்க்கெட்டில் பதுங்கி விடுவதாலும் தான்.

பிள்ளையை விற்கிறார்கள், பிண்ணாக்கைத் தின்கிறார்கள் என்று பத்திரிகையில் செய்தியைப் போடுகிறார்கள் என்று சர்க்கார் ஆத்திரப்படுவதில் அர்த்தமில்லை. இருக்கும் நிலைமையைச் சொன்னாலும் புரியாமல், சமாளிக்கவும் முடியாமல், டெல்லிக்குப் போய்வந்தும் என்ன செய்வதென்று மந்திரிமார் ஏங்கினின்றால் மக்களின் கதிதான் என்ன ?

விவசாயத்திலும், விளைபொருள் விற்பனையிலும், வாங்கி உபயோகிப்பதிலும் எல்லையற்ற கட்டுப்பாடுகளால் சங்கடங்கள் மிகுந்து விட்டதுதான் மிச்சமாயிருக்கிறது. எண்ணைச் செலவேயன்றி பிள்ளை பிழைத்தபாடில்லை. விவசாயிகள் வசமும் மக்களிடமும் உணவுப் பிரச்னையை விட்டுவிட மனமில்லாமல் போனாலும சரியான முறையிலாவது பிரச்னையை அணுகவேண்டும். ரஸாயன உரங்களின் உபயோகத்தை மக்கள் உணரும்படி செய்து வேண்டிய உரமும் கடனுக வாங்கிக்கொடுத்தால் மூன்று மடங்குக்குமேல் விளைவைப் பெருக்க முடியுமென்பதை நிபுணர்கள் நிரூபித்திருக்கிறார்கள். திருவாளர் வி. சேஷசாயி அவர்கள் மேட்டூரில் தனது தொழிற்சாலைப் பண்ணையில் இதைப் பத்துப்பனிரண்டு ஏக்கராக்களில் பரிட்சித்துப் பார்த்து வெற்றி கண்டிருக்கிறார். கோவை தொழில் மன்னர் விஞ்ஞான முறையில் விளைவைப் பெருக்கும் வழியை போத்தனூரில் தனது பண்ணையில் செய்து காட்டியிருக்கிறார். இப்படி தனி நபர்கள் பல அரிய சாதனைகள் புரிந்திருக்கிறார்கள்.

சர்க்கார் வழக்கமான ஆராய்ச்சிகள்—உத்திரவுகள் என்ற மந்த கதியை விட்டுவிட்டு, தனிப்பட்ட பெரிய விவசாயிகள், தொழில் அதிபர்களைக் கொண்ட மகாநாட்டைக் கூட்டி அவசரமாக ஆராய்ந்து நடவடிக்கை எடுத்துக்கொண்டால் உணவுப் பஞ்சம் போக்க ஒருவழி கண்டுபிடிக்க முடியாமல் போகாது. வடக்கே ஓடிக்கொண்டிருப்பதைவிட்டு உட்கார்ந்து வேலை செய்தால் நிச்சயம் பலன் கிடைக்குமென்பதை சர்க்காருக்குப் புரியும்படி யார் போய்ச் சொல்லுவது ?

சேவா சங்கம்

# கலை விழா

திருலோக-சீதாராம்

ஆயிரம் கந்தல்களை ஒட்டுப் போட்டு மூடித்தைத்த மாதிரியில் நடுத்தர வகுப்பாரின் வாழ்க்கை மாறிப்போயிருக்கிறது. ஒருவரை ஒருவர் ஏமாற்றி வேஷம் போட முயற்சித்து தாங்களே ஏமாற்றிக் கொள்கிறார்கள்.

இப்பால் இரண்டு தலைமுறைகளுக்குட்பட்டுத்தான் இந்தப் போலிக்கு நாம் அடிமையாகியிருக்கிறோம். வீட்டில் இருக்கும் மூத்த தலைமுறையைச் சேர்ந்தவர்களுக்கு நமது இந்த "நாகரீக"ப் பித்தலாட்டங்களுடன் ஒத்துப்போகத் தெரியவில்லை. அதாவது இயலவிலை

பெண்பார்க்கப் பிள்ளைவீட்டார் வரப்போகிறார்கள் என்பதற்காகப் பக்கத்து வீட்டிலிருந்து வெள்ளிப் பாத்திரங்களும், நகைகளும் இரவல் வாங்கி வந்து வைத்திருக்கிறார்கள். பிள்ளையின் தாயார் தனவந்த வேஷம் தாராளமாகப்போடுகிறாள். கல்யாண விஷயம் என்று அறிந்த மகிழ்ச்சியில் பெண்ணின் பாட்டி சூது வாது அறியாமல் "அதுதானே பார்த்தேன்—ஏதடா வெள்ளிப்பாத்திரமும் நகையும் இரவல் வாங்கிக்கொண்டு வருகிறாளே என்று. இவர்கள் வரப்போகிறார்கள் என்று முன்னமே சொல்லியிருக்கப்படாதோ" என்று நடுவில் போட்டு ரகசியத்தை உடைத்து விடுகிறாள். பிள்ளை வீட்டாருக்கு அங்கே ஒரு நிமிஷம்கூட தாமதிக்கப் பைத்தியமா பிடித்திருக்கிறது.

பெண்ணை மேலே படிக்கவைத்துவிடலாமென்று முடிவு செய்கிறார் தகப்பனர். பெண் பார்க்க வந்து போன பையனிடமிருந்து கடிதம் வருகிறது. அவன் உண்மையை எழுதியிருந்தான். நேற்று வந்தபோது ஏறிக்கொண்டு வந்த காரும் மற்றைய ஆடம்பரங்களும் இரவல் என்று. இப்படி ஒருவரை ஒருவர் பணக்கார வேஷம் போட்டு ஏமாற்றியிருக்கவேண்டியதில்லை யல்லவா ? 'கல்யாணிக்கு' விவாகம் சுபமுகூர்த்தத்தில் நடந்திருக்குமென்றும் போலித்தனம் இல்லாமல் சம்மந்தம் இனிமையாக உறுதிப்பட்டிருக்குமென்றும் கதையை முடித்துக் கொள்ளலாமல்லவா? நமது சமூக வாழ்வின் போலிக்கு அருமையான உதாரணம்.

திருச்சி சேவா சங்கத்தாரின் மூன்றாவது கலை விழாவையொட்டி கோட்டை ரயில்வே இன்ஸ்டிட்யூட்டில் 26-8-50 மாலை 6 மணிக்கு நடைபெற்ற சிறு நாடகம் இது. கல்யாணியின் கல்யாணம். கதையின் ஆசிரியை மீனாக்ஷி சீதாராமன் பொக்கை வாய்ப் பாட்டியாக வந்து அருமையாக நடித்தார். பரிசு வழங்கும்போது வாய்நிறையத்தெரிந்த பல் வரிசை பாட்டியாக இருந்தபோது எப்படி மாயமாகப் போயிருந்தது என்று இன்னும் வியப்படைகிறேன்.

மேக்கப் ஒரு அருங்கலை. வாழ்க்கையாகிய நாடகத்தில்கூட நமது மேக்கப்புகள் நிலைப்பதில்லை. நிஜநாடகத்தில் அதுவும் தொழில் நடிகர்களல்லாமல், கலா உபாசனை செய்யும் பெண்மணிகள் அன்று காட்டிய மேக்கப்—நடிப்பு ஆகிய திறமைகள் எளிதன்று.

'நட்சத்திர உலகில்' என்ற மற்றொரு நாடகமும் நடைபெற்றது. அகல்யா கற்பனை அழகாக அமைந்தது. எழுத்தாளர் ஆர். ஜெகனாதன் "கலைமகள்" குழுவைச் சேர்ந்தவர் என்று கேள்விப்பட்டேன். கண்டதும் காதல் கானல் நீராகிவிடாமல் இதயக்கலப்பாகவும் கடமையுணர்ச்சியாகவும் மலரவேண்டிய நீர்மையை சரளமாகப்பின்னியிருந்தார். கதாநாயகியாக அலமேலு தாத்தம் 'அகல்யாவாக' நடித்தபோதும் 'சரஸ்வதி'யின் இயல்பான பாத்திரத்திலும் மேலான கலாசாகஸம் புரிந்தார். 'ருக்மணி'யம்மாள் பேசாமல் மேடையில் தோன்றியிருந்தால்கூட உதட்டிலும் முகபாவத்திலும் அசைக்கும் உணர்ச்சிகளை வர்ணிக்க முடியாது. அற்புதம் போங்கள். 'வாஞ்சி'யின் பெருமிதமான நடிப்பை எவ்வளவு புகழ்ந்தாலும் தகும். 'கிருஷ்ணனாக' நடித்த தங்கத்தைப்பற்றி ஒரு வார்த்தை சொல்லியாக வேண்டும். தங்கம் ஆணாக வந்து நடிக்கும்போது தொழில் நாடகங்களில் ஸ்திரீபார்ட்டுப்போட்டு வெற்றி பெற்றுவிட்ட எவரையும்விட இந்த வேஷப் பொருத்தமும் நடிப்பும் ஓராயிர மடங்கு சிறப்பாக இருக்கிறது.

சீதா ராஜாங்கத்தின் "தீராத விளையாட்டுப் பிள்ளை" அபிநயம் மிகவும் நேர்த்தி. பின்னே திரும்பு முன்னே அவன் சென்று மறைவது நெஞ்சிலிருந்து இன்னும் மறையவில்லை. பிளேட் அடுத்த பக்கம் திரும்பும் ஒரு கணநேரம் அபிநயம் பிடித்த பாவத்தில் அப்படியே சிலையாக நின்றுவிடும் தந்திரம் டைரக்ட் செய்தவரின் சாமர்த்தியத்தைக் காட்டுகிறது. சேவா சங்க நாடகம் அமெச்சூர்த் தனத்தின் பலஹீனங்களில்லாமல் தொழில் நாடகங்களின் வெற்றியையும்விஞ்சிநிற்கிறது. நாடகக்கலைக்கு இவர்கள் சிறந்த சேவை செய்கிறார்கள் என்பதில் எல்லையற்ற மகிழ்ச்சியுண்டாகிறது.

இத்தனையும் வெறும் பொழுது போக்கு அல்ல என்பதைப் புரிந்து கொள்ளும்போதுதான் கலையின் பயன் வாழ்வு முன்னேற்றம் என்பதை உணரமுடியும். வசூல் தொகையிலிருந்து அனாதாசிரமமும் பெண்களின் தொழிற்சாலையும் ஏற்படுத்த அவர்கள் முடிவு செய்திருக்கிறார்கள் என்பது போற்றற்குரிய விஷயம். சமூக சேவைக்கு அரும்பாடுபட்டு வரும் சேவாசங்கம் தமிழ்நாட்டின் பெண் குலத்துக்கே ஒரு வெற்றி. இதைவிட நமக்குப் பெருமை என்ன இருக்கிறது !

## திருத்தம்

13-8-50 சிவாஜி இதழில் கடைசி பக்கம் முதல்கலம் அடிப்பகுதியில் உள்ள கரூர் டி. மு. கோர்ட் விளம்பரத்தில் O. S. No. என்பதை O. P No. என்று மாற்றிப்படிக்கவும்.

## வெளியேருத அன்னியர் திட்டுப் பிரதேசங்கள்

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

ஒரு வருஷம் வரை பிரெஞ்சு சர்க்காரிடமிருந்து பதில் ஒன்றும் கிடைக்கவில்லை. தற்போதிருந்து வரும் நிலைமையைக் குலைக்காமலிருக்கும் பொருட்டு, பொதுஜன வாக்கு கணிப்பு முடியும் வரை, 1941-ம் வருஷ ஒப்பந்தத்தை நீடிக்கலாமென்று, இந்திய சர்க்கார் 1949 பிப்ரவரியில் ஒருயோசனை கூறினர். பிரெஞ்சு சர்க்கார் இதை ஏற்றுக் கொள்ளவில்லை. ஆனால், அதற்குப் பதிலாக, 1949 மார்ச் மத்தியில், 1941-ம் வருஷ ஒப்பந்தத்தை மாற்றப் புதியதொரு ஏற்பாட்டைச் சிபாரிசு செய்தனர். வாக்கு கணிப்பு வெகு சமீபத்திலேயே நடைபெறவிருந்ததாலும், 1941-ம் வருஷ ஒப்பந்தம் மார்ச் 31-ந் தேதி காலாவதியாக விருந்ததால் அதற்குள், இந்தப் புதிய யோசனையைப் பரிசீலனை செய்யப் போதிய அவகாசம் இல்லாமலிருந்ததாலும், இந்திய சர்க்கார் பிரெஞ்சு சர்க்காரின் அந்த யோசனை ஏற்றுக்கொள்ள முடியவில்லை.

இதன் விளைவாக, சுங்க ஒப்பந்தம் 1949 ஏப்ரலில் ரத்தாயிற்று. சாதாரணமாக அன்னிய நாடுகளுக்குப் பிரயோசனமாகக்கூடிய, சுங்கக் கட்டுப்பாடுகளும், இறக்குமதி ஏற்றுமதிக் கட்டுப்பாடுகளும் பிரெஞ்சுப் பிரதேசங்கள் விஷயத்திலும் பிரயோகத்துக்கு வந்தன. இந்திய கம்யூனிஸ்டுகள், இந்தியப் பிரதேசங்களில் தங்கள் நடவடிக்கைகளுக்கு பிரெஞ்சு திட்டுப் பகுதிகளையே தளங்களாக உபயோகித்து வந்ததால் இவர்களுடைய நடமாட்டத்தைத் தடுக்கும் பொருட்டு, பிரெஞ்சு இந்தியப் பிரதேசங்களுக்கும், இந்தியப் பிரதேசங்களால் சூழப்பட்டிருக்கும் பிரெஞ்சிந்திய திட்டுப் பகுதிகளுக்குமிடையே ஆள் நடமாட்டத்தைக் கட்டுப்படுத்தும் வகையில் அனுமதி வழங்கும் முறையொன்றை இந்திய சர்க்கார் அமுலுக்குக் கொண்டு வந்தனர். யுத்தத்துக்குப் பிறகு பொருளாதார நிலைமையில் ஏற்பட்டிருந்த மாறுதல்கள் காரணமாக, சுங்கக் கட்டுப்பாடுகளை, 1941-க்கு முன்பு இருந்துவந்ததைவிட அதிக கண்டிப்புடன் அமுல் நடத்தவேண்டிய அவசியம் ஏற்பட்டிருந்ததால், இரு பிரதேசங்களுக்குமிடையே ஜன நடமாட்டத்தைக் கட்டுப்படுத்துவது, இதற்கு உதவியாயிருக்குமென்றும் கருதப்பட்டது.

பொதுஜன வாக்கு கணிப்பு முடிவடையும் வரை 1941-ம் வருஷ சுங்க ஒப்பந்தத்தையே அமுல் நடத்திவரலாமென்று இந்திய சர்க்கார் 1949 ஏப்ரலில் மீண்டும் யோசனை கூறினர். இதையும் பிரெஞ்சு சர்க்கார் நிராகரித்து விட்டனர். சுங்கக்கட்டுப்பாடுகளை அமுல் நடத்துவதால் பிரெஞ்சு இந்திய மக்களுக்கு அனாவசியமான தொந்தரவுகள் ஏற்பட்டுவிடாமல் பார்த்துக்கொள்ளும் பொருட்டு, இந்திய சர்க்கார், சில விதிகளைத் தளர்த்தியிருக்கின்றனர். சுங்கக்கட்டுப்பாடுகளை மீண்டும் விதித்ததால் ஏற்பட்டிருந்த கஷ்டங்களில் பெரும்பாலானவை அகன்று விட்டதாக பிரெஞ்சு அதிகாரிகளே இப்பொழுது ஒப்புக்கொண்டிருக்கின்றனர்.

பொதுஜன வாக்கு கணப்பு விஷயத்தில் பிரெஞ்சு அதிகாரிகளுடன் ஒரு உடன்பாட்டுக்கு வருவதற்கு இந்திய சர்க்கார் மேற்கொண்டுள்ள முயற்சிகள் தொடர்ந்து நடைபெற்று வருகின்றன.

### போர்ச்சுக்கீஸியப் பிரதேசங்கள்

இந்தியாவில் போர்ச்சுக்கீசியருக்குச்சொந்தமான பிரதேச மக்கள் செய்துவரும் கிளர்ச்சியும், போர்ச்சுகீசிய சர்க்காருடன் இந்திய சர்க்கார் நடத்திவரும் வார்த்தைகளும் பலனளிக்கவில்லை.

1948 ஜூலையில் பாரிஸில் நடைபெற்ற ஒரு சந்திப்பின்போது, பிரிட்டனிலுள்ள இந்திய ஹைகமிஷனர், இந்திய பிரதேசங்களிலிருந்து அன்னிய ஆட்சி அகன்று இந்தியா ஐக்கியப்படவேண்டுமென்ற உணர்ச்சி இந்தியப் பொதுமக்களிடையே வளர்ந்து வருவதை போர்ச்சிகீசிய வெளிவிவகார மந்திரியிடம் எடுத்துரைத்து, இந்தியாவில் ஏற்பட்டுள்ள மாறுதலை உணர்ந்து அவர்கள் நடந்துகொள்ள வேண்டுமென்று வற்புறுத்திக் கூறினார். காலப்போக்கை அநுசரித்து நடந்துகொள்ள வேண்டும் என்பதை போர்ச்சுகீசிய வெளிவிவகார மந்திரியும் ஒப்புக்கொண்டார்.

போர்ச்சுக்கீசியப் பிரதேசங்கள் விஷயத்தில் இந்தியா கொண்டுள்ள மனப்பான்மை விளக்கி 1950 பிப்ரவரியில் போர்ச்சுக்கீசிய சர்க்காருக்கு ஒரு கடிதம் அனுப்பப்பட்டது. இந்தியாவிலுள்ள போர்ச்சுகீசியப் பிரதேசங்களின் எதிர்காலம் பற்றியும், அவற்றை இந்தியக் குடியரசுடன் எவ்வாறு மீண்டும் இணைப்பது என்பது பற்றியும் இரண்டு சர்க்கார்களுக்குமிடையே உடனடியாகப் பேச்சு வார்த்தைகள் ஆரம்பமாகவேண்டுமென்று அந்தக் கடிதத்தில் குறிப்பிட்டிருக்கிறது. போர்ச்சுகீசிய சர்க்கார், சென்ற ஜூனில், லிஸ்பனிலுள்ள இந்திய மந்திரியிடம் கொடுத்த பதிலில், தங்கள் பிரதேங்களின் ஆதிபத்திய உரிமையை இந்தியாவுக்கு மாற்றுவது பற்றி விவாதிக்க மறுத்துவிட்டனர். இதுபற்றி இந்தியாவுடன் விவாதிக்க போர்ச்சுக்கல் மறுத்துவிட்டபடியால், இந்திய சர்க்கார் கோவாவின் நிலைமை பற்றியும் போர்ச்சுகலுக்குச் சொந்தமான மற்ற பிரதேசங்களின் நிலைமை பற்றியும் மீண்டும் விரிவாகப் பரிசீலனை செய்திருக்கின்றனர். சிக்கலான இந்தப் பிரசினை அமைதியாகத் தீர்க்கப்பட்டு இந்தப் பிரதேசங்கள் இந்தியக்குடியரசுடன் ஐக்கியமாகி விடவேண்டும் என்பதே இன்னமும் இந்தியாவின் லட்கியமாக இருந்து வருகிறது.

---

**கரூர் டி. மு. கோர்ட்டு**

**I. A. 843/50 O. S. 408/50**

கரூர். *D.M.C. O.S. 209/47* வாதியும் ஷை நெம்பர் பிரதிவாதி *R. K.* வெங்கடாசல நாயிடு *General Body of Creditors*களின் *Representative K. V.* விஸ்வநாதய்யர்.

—வாதி

காத்தாநாயுடு 1. கே. பெரியசாமி நாயுடு 2. ஆர். கே. ராமச்சந்திரநாயுடு 3. ஆர். கே. வெங்கடாசல நாயுடு 4. காமாக்ஷி நாயுடு 5.

—பிரதிவாதிகள்.

ஷை வாதி ரெங்கனதபுரம் காத்தா நாயுடு குமாரர் ஆர். கே. வெங்டாசல நாயுடுவின் *Generel Body of Creditors*களின் *Representative* ஆக *O.S 209/47 E. A. 159/49*ல் ஏற்பட்ட *Clain Summary order*ரை ரத்து செய்ய தாவா செய்து 1–9–50 வாய்தா ஏற்பட்டிருக்கிறது. ஷை நெம்பரில் பார்ட்டியாக சேர இஷ்டமுள்ளவர்கள் கோர்ட்டில் 1–9–50ல் ஆஜராய் மனு செய்து கொள்ளலாம்.

கரூர் 23-8-50 } **B. K. வேம்பு அய்யர்** வக்கீல்

---

**கரூர் டி. மு. கோர்டார் அவர்கள் சமூகம்**

**O. S. 395/50 I. A. 807/50**

1. P. S Venkatarao.
2. P. V. Rajarao.
3. M. V. Krishnaswamy ayengar.
4. P. S. Ramachandrarao.
5. N. P. Ramakrishnan.
6. M. Ramaswamy Pillai.

வாதிகள்

மனுதாரர்கள்

1. State of Madras represented by Collector of Thiruchirapalli.
2. V. Ramasamy Naidu.
3. Rengaraju Naidu.
4. Govindarajalu Naidu.

—பிரதிவாதிகள்.

C. P. C. order 1 rule 8 படி வாதிவக்கீல் தெரிவிக்கும் நோட்டீசு. ஷை வாதிக்கு நெரூர் கிராமம் தென் பாகம் அ. பு. ச. 2147/2. ஏ 6·91 2149/3ஏ, 1.66. இவைகள் தங்களுக்கும் இதர ஷை கிராமத்திய சமுதாயதார்களுக்கும் பாத்தியப்பட்டதென்றும் கோர்ட் மூலம் சுவாதீனம் கிடைக்க வேண்டுமென்றும் இதர பரிஹாரங்களுக்கும் கோரி தாவா துடங்கி ஷை தாவாவில் தாங்கள் இதரர்களுக்குமாக தாவாவை நடத்த அனுமதிக்க வேணுமாய் கோர்ட்டார் அவர்களுக்கு மனு செய்து ஷை மனு 13—10—50ம் விசாரணை வாய்தா ஏற்பட்டிருப்பதில் அவ்விதம் வாதிகள் தாவா துடங்குவதில் மனுதார்கள் எவருக்கும் ஆக்ஷேபனை உண்டானால் சமூகம் கோர்ட்டில் ஷை தேதியில் நேரிலோ வக்கீல் மூலமோ ஆஜராகி தெரிவித்து கொள்ளலாம்.

**K. Krishnasamy Iyengar.**

கரூர் 17-8-50 } வாதியின் வக்கீல்

---

In the Court of Dt. Munsif of Tiruchirapalli.

O. P. 41/50

(In the matter of the Estate of P. Gajapathi Rao Naidu deceased)

1. Mrs. P.G. Mahalakshmi Ammal, 2. Minor Hari, 3. Gopinath, 4. Sridharam, 5. Ravi, 6. Malliharjunan

Minors 2 to 6 by Guardian and mother 1st Petitioner, all residing at No. 5. Pattabirama Pillai Street, Thennur, Tiruchirapalli.

Take notice that the petition filed by the Petitioners for issue of a succession certificate empowering them to collect debts due from the Royal Exchange Assurance by their Madras Agents Parry & Co., payable under insurance palicy No. 134510 due to deceased P. Gajapathi Rao Naidu is posted to 31—8—1950.

**K. Jamal Mohamed**
**Advocate for Petitioners**

---

எனது நண்பர்கள் 4.

# மிஸ்டர் 'புரியாதது'

'சுராஜ்'

எனது நாலாவது நண்பர் மிஸ்டர் புரியாதவரை உங்களுக்குப் புரிய வைப்பது எப்படி யென்றே எனக்குப் புரியவில்லை!

உங்களுக்குப் புரியும்படியாகச் சொல்லவேண்டுமென்றால் அவர் இன்று நேற்று முளைத்த குருத்து எழுத்தாளர் அல்ல. காலம் கண்டு கலை முன்னேற்றத்துக்கு அஸ்திவாரமிட்ட விரல் விட்டு எண்ணப்பட வேண்டிய கோஷ்டியிலே முன்னணியில் நிற்பவர்.

புகையிலை குதப்பும் வாய்......ஏக்கப் பெருமூச்சு......கையில் எப்போதும் பெர்னாட்ஷா.........இப்படி காட்சி தருவார் நண்பர்.

அவரை உங்களுக்கு அதிகம் புரிய வைக்க எங்கள் இருவருக்குள் நேர்ந்த ஒரு சம்பாஷணையைத் தருகிறேன் கீழே.

"........ஒரு கதை எழுதியிருக்கிறார்........பார்த்தீர்களோ?

"........யார் அது?"

"........வாரப்பதிப்பிலே எழுதுகிறாரே அடிக்கடி........

"என்ன படித்திருக்கிறார்?"

".......கம்பாவுண்டராக இருந்து எழுத்தாளராக..........."

"பரிணமித்திருக்கிறாரோ........

அவசியம் அவர் கதைகளைப் படிக்க வேண்டியதுதான்."

"கல்விக்கும் கலைத் திறமைக்கும்',

"என்ன சம்பந்தம் என்கிறீர்களோ? ஆமாம் தடி எடுத்தவனெல்லாம் தண்டல்காரன் பேனா பிடித்தவனெல்லாம் எழுத்தாளன் தானே!"

"நீங்கள் அவரது எழுத்துக்களைப் படிக்கவேண்டும்..........படிக்காமல் விமர்சனம் செய்வது........படம் பார்க்காமல் அபிப்பிராயம் சொல்வது........"

"நான் சொல்கிறேன் சார்........ முறையான இலக்கியப் பயிற்சி பெற்றபின் தான் பேனாவை எடுக்க வேண்டும்."

"சிறு கதைகளில் வார்த்தை நகாஸூம் அமைப்பும் தானே தேவை! அது இருந்தால் யார் எழுதினால் என்ன.......மேலும் நீங்கள் குறிப்பிடும் கோஷ்டியினர் எழுதுவது ஒன்றுமே புரியவில்லையே!"

"புரியாது......மழைக்குப் பள்ளியறையில் ஒதுங்கியவனுக்கு ஒன்றுமே புரியாது."

"மக்கள் நிலைக்கு இலக்கியம் ஏற்றதாக"

"இறங்கவேண்டுமென்கிறீர்கள்..... எங்கள் தொண்டு மக்களை எங்கள் நிலைக்கு ஏற்றுவதுதான்......இறக்குவதல்ல........

"எளிய இலக்கியமாயிருந்தால்"

"எளியது இலக்கியமாக முடியாது........

ஃ ஃ ஃ

ஒரு பிரபல எழுத்தாளரைப்பற்றிக் கூறி அவர் பெற்றிருக்கும் பெருமையையும் நண்பர் இருக்கும் இருட்டடிப்பைப் பற்றியும் நினைவுபடுத்தினால் மிஸ்டர் புரியாதது சொல்லுவார்

'.........இதுவரை எழுதியவை ........இனிமேல் எழுதத் திட்டமிட்டவை எல்லாம் சேர்த்தாலும் என் ஒரு சிறு கதையின் சிறிய சொல்லமைப்புக்கூட ஈடாகாது" என்பார்.

நண்பர் எழுத்துக்களைப் போலவே அவரது வாழ்க்கையும் புரியாத புதிர் தான் போங்கள்!



# பொம்மை விவகாரம்!

சிவகுமாரன்

சுவாரஸ்யமான கற்பனையொன்று உதயமாகவே பத்திரிகையை வைத்துவிட்டு எழுதும் மேஜையண்டை சென்றேன். எழுதுகோல் கூர் முறிந்திருந்தது. பேனாவையும் காணோம். என் மேஜையின் மேல் இன்னும் சில மாறுதல்கள் ஏற்பட்டிருக்கக்கண்டு சாரதாதான் அங்கே வந்திருக்க வேண்டுமென்று ஊகித்தேன். அறையைவிட்டு வெளியே வந்ததும் என் குழந்தை ராஜம் கத்தியையும் பேனாவையும் வைத்து விளையாடிக்கொண்டிருந்தாள். அந்தப் பேனா எனக்கு ஒரு நண்பர் பரிசளித்தது. அழகான வர்ணங்கள் தீட்டியிருந்ததால் அதை விடுவதற்கு ராஜத்திற்கு இஷ்டமில்லை. அதைப் பிடுங்கப்போனபோது குழந்தை 'வீர்' என்று மாதுரார்ஜிதமான குரலில் அலறினாள், சத்தத்தைக்கேட்டுச் சாரதா வெளியே வந்தாள்.

'இந்தா சாரதா நாம் பாகிஸ்தான் பிரித்ததிலிருந்து என் உத்திரவில்லாமல் மேஜையின் மேலிருந்து எதையும் தொடக்கூடாதென்பது ஒப்பந்தமில்லையா? உன் பெண் ஏன் என் மேஜையிலிருந்த சாமான்களை வைத்துக்கொண்டிருக்கிறாள்? இதுதான் மெஜாரிட்டி ராஜ்யம் என்பது. நீங்கள் இரண்டுபேர் என்பதற்காக என் தளவாடங்களை ஆக்கிரமித்துக்கொள்வது நியாயமா?.

'பாதுஷா, ஸலாமத், நீங்கள் நின்று பேசுவது யாருடைய பிரதேசமென்பது நினைவிருக்கட்டும்'.

ஒன்பதடி ஆறங்குலம் பின்னால் போய் என் அறையின் வாசற்படியில் நின்று கொண்டேன். 'இப்போது சொல்லு. ஏன் என் மேஜையில் நீ எழுத வந்தாய்? அது மாத்திரமின்றி என் சாமான்களைத் திருடி உன் பிரஜைக்கு ஏன் கொடுத்தாய்?

'என் மேலென்ன பிசகு? உங்கள் மைக்கூட்டில் மசி தீர்ந்து விட்டதென்று என்னுடையதை இரவல் வாங்கினீர்களல்லவா? அதை ஏன் திருப்பிக் கொடுக்கவில்லை? அதனால் தான் எழுத வந்தேன், அப்படியே குழந்தை தெரியாமல் உங்கள் அதிசயப்பேனாவைக்கொண்டு வந்திருக்கிறாள். அதை அவருக்கே கொடுத்துவிடம்மா', வென்று கூறியவண்ணம் அதைவாங்கி என் பக்கம் எறிந்தாள்.

பழிகாரி, என்ன வஞ்சனை, நான் பேனாவைப் பிடுங்கியபோது கதறிய ராஜம் இப்போது சத்தம் போடாமல் தன் சங்கிலியின் முகப்பை ருசிபார்க்கத்தொடங்கினாள்.

இந்த இடைஞ்சல்களினால் சிதறுண்ட என் கற்பனைகளைத்திரட்டி மறுபடியும் எழுதத்தொடங்கினேன். அரைமணி நேரமாகியிருக்கும். சாரதா மெதுவாகக் கதவைத்தட்டி', உள்ளே வரலாமா? என்றாள்.

'வரலாம்'.

ஒரு கையில் டிபன் தட்டையும் மற்றொரு கையில் குழந்தையையும் பிடித்து அழைத்து வந்தவள் தட்டை மேஜையின் மீது வைத்துவிட்டுக் குழந்தையையும் பக்கத்தில் உட்கார வைத்தாள். ராஜத்திற்கு என் பேனாவின் மீது அன்பு பிறந்துவிட்டது. அதை எடுத்து மசியால் தோய்த்து நான் எழுதியவைகளைத் திருத்தலானாள். அவள் கையிலிருந்து பேனாவை திருப்பி வாங்குவது அசாத்தியமாகி விடவே என் காகிதங்களை யெல்லாம் எடுத்துக் கொண்டு அவளிடம் ஒரு பழைய தாளைக்கொடுத்தேன். யாருக்கும் புரியாத பாஷையில் அவள் என்னவெல்லாமோ எழுதத்தொடங்கினாள். பிற்காலத்தில் பெரிய கதாசிரியை ஆக வேண்டியவள் அல்லவா?

'எவ்வளவு நாளைக்குத்தான் பொம்மையில்லாமல் இருப்பாள். அதனால் தான் உங்கள் பேனாவை வைத்துக் கொண்டு விளையாடுகிறேனென்கிறாள். அவளுக்கு ஏன் ஒரு பொம்மை வாங்கித்தரக்கூடாது'?.

அவசியம் செய்ய வேண்டியதுதான். கொஞ்சம் பொறு. அமெரிக்காவில் புதிதாக ஒரு உலோகம் கண்டுபிடிக்கிறார்கள். அணுகுண்டாலும் துளைக்கமுடியாத உலோகமாம் அது. அந்த உலோகம் இந்தியாவிற்கு வந்ததும் நம் ராமசாமி ஆசாரியிடம் கொடுத்து நல்ல பொம்மையாகச் செய்யச்சொல்லி விடுகிறேன். உன் பெண்ணிற்குப் பொம்மை வாங்கிக்கொடுத்து என் பொக்கிஷமே வறண்டு போய்விட்டது. இனிமேல் உன்னிடமிருந்து வசூலித்துத்தான் அவளுக்குப் பொம்மைவாங்கவேண்டும்!

'அது எனக்குத்தெரியாது. இன்று அவளுக்குப் பொம்மை வாங்கித்தான் தரவேண்டும். இல்லையானால் உங்களுக்குப் பேனா கிடைக்காது. இல்லையா ராஜம்' என்று தன் திருக்குமாரியைக் கேட்டாள். அவளும் வாயைத்திறந்துதனக்கிரு முன் பற்களிருப்பதைக் காட்டினாள்.

மெஜாரிட்டி வோட்டுக்கள். இனி வேறு வழியில்லை. சட்டையை மாட்டிக்கொண்டு வெளியில் போகப்புறப்பட்டேன்.

'இதோ குழந்தையையும் அழைத்துக்கொண்டு போங்கள். நீங்கள் வாங்குகிறது அவளுக்கும் பிடித்திருக்கட்டும்.

ஃ ஃ ஃ

பெரிய பொம்மைக்கடை. ராஜத்திற்கு ஒரே குதூகலம். ஒரு பீரோவிலிருந்த பொம்மைகள் அனைத்தும் தனக்கே வேண்டுமென்று அலறினாள். அவளைத்திருப்தி செய்யக்குறைந்தது என் ஆறுமாதச் சம்பளமாவது தேவை. அவளைக்கீழே விட்டுவிட்டுப் பொம்மைகளைத் தேர்ந்தெடுக்கத் தொடங்கினேன். ஐந்து நிமிஷங்களுக்குள் 'படார்' என்று சத்தம் கேட்டது. மூலையில் வைத்திருந்த பீங்கான் பதுமையொன்று பொடியாகிக்கிடந்தது. சத்தத்தில் நடுங்கிய ராஜம் ஓடிவந்து என் கால்களைக்கட்டிக்கொண்டாள். நான் குற்றவாளியைப்போல் விழித்தேன். கஷ்டம், அதற்கும் நான்தான் பணம் கொடுக்க வேண்டும். அதிக நேரம் அங்கே நிற்க மனமில்லாமல் கெட்டியான தேக்கு மரப்பொம்மை யொன்றை எடுத்துக் கொண்டு கிளம்பினேன். 'பில்'லைப்பார்த்ததும் வயிற்றை என்னவோ செய்தது. 37 ரூபாய் மூன்றணா. கடைக்காரரைப் பார்த்தேன்.' "ஆமாம் சார், அந்தச்சிலையின் விலை முப்பத்தைந்து ரூபாய்' என்றார்.

[அடுத்த பக்கம் பார்க்க]

# அவரை விடாதீர்கள்

"மெய்யன்பன்"

நடைபெறவிருக்கும் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டித் தலைவர் தேர்தலில் காமராஜரையே தேர்ந்தெடுக்கும்படி கேட்டுக்கொள்கிறேன். சொந்த ஹோதாவில் இப்படி வேண்டுகோள் விடுக்க ஒரு காரணமுமில்லாவிட்டாலும் பொதுமக்களின் சார்பில் இந்த அறிக்கை விடவேண்டியது எனது தவிர்க்க முடியாத கடமையாக இருக்கிறது. பொதுமக்களின் நன்மைக்காக அவர் பதவியை வேட்பதற்கும், அவரை ஆதரிக்கும்படி பொதுமக்களின் சார்பில் நான் கேட்பதற்கும் காரணம் இருக்கிறது என்பதைத் தாழ்மையுடன் அறிவித்துக் கொள்கிறேன்.

பொதுமக்களாகப் பார்த்து இந்தத் தேர்தலில் வாக்களிப்பதாக இருந்தால் நாங்கள் இப்போது கவலைப்பட வேண்டியதில்லை. மாகாண கமிட்டி மெம்பர்கள்தான் இதில் வாக்காளர்களாக இருப்பதால் அவர்கள் பொதுமக்களின் விருப்பத்திற்கு விரோதமாக வேறு யாரையாவது தேர்ந்தெடுத்துவிடக் கூடாதே என்ற கவலைதான் எனக்கு ஏற்பட்டிருக்கிறது.

ஃ ஃ ஃ

பதினுறு ஆண்டுகள் தலைவர் பதவியில் இருந்துவிட்டார். இனியேனும விட்டுக்கொடுக்கக் கூடாதா என்ற கேள்வி கேட்கப்படுகிறது. தமிழ்நாடு காங்கிரஸ் காமராஜின் பிதிரார்ஜித சொத்து அல்ல. தனக்கு பாகம் வேண்டாம் என அடுத்த சகோதரருக்கு சொத்தை விட்டுக்கொடுத்து விடுதலைப் பத்திரம் எழுதிக் கொடுக்க. ஸ்தாபனம் மக்களின் சொத்து, மக்கள் விருப்பப்படிதான் காரியங்கள் நடைபெறவேண்டும். மக்கள் விரும்புகிறவர்தான் மக்களின் பிரதிநிதியாக, தலைவராக வர முடியும். மக்கள் விரும்புகிறார்கள் காமராஜ் தலைமை வேண்டுமென்று. ஆகவே இன்று தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியில் அங்கம் வகிப்பவர்கள் சிந்திக்க வேண்டும். தீரயோசித்து செய்ய வேண்டும். எப்படியிருப்பினும் தலைவர்தேர்தலில் தங்களுடைய ஓட் காமராஜுக்கு என்பதை திட்டவட்டமாக சொல்லிவிட வேண்டும்.

காமராஜுக்கு விரோதமாகப் போட்டியிடுபவர்கள் சொல்லலாம் ஆயிரம குறைபாடுகள். அது என்ன என்பதைக்கூட எவரும் செவி சாய்த்துக் கேட்கக் கூடாது என்பதே என் கருத்து. மக்கள் அபிப்பிராயத்தை மதித்து நடக்கவேண்டியதுதான் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளின் பொறுப்பும் கடமையுமாகும்.

ஸ்தாபனத்தை நடத்திச் செல்வது மட்டுமல்ல, சென்னை சட்டசபையில் எத்தனை பாஷாவாரி மாகாணத் தலைவர்கள் இருந்தபோதிலும் நடுநாயகமாக விளங்குவது தமிழ் மொழியும் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியின் தலைவருமேயாகும். சென்னை சட்டசபையையும், மந்திரி சபையையும், சிருஷ்டிக்கவும் அழிக்கவும் சரியான சமயத்தில் எச்சரிக்கை செய்யவும் துணிச்சலும், ராஜதந்திரமும் நிறைந்த தலைவர் வேண்டுமென்பதை எவரும் மறுக்கமுடியுமா?

இந்தப்பதினுன்கு வருடகாலத்தில் போராட்டத்தின் தலைவராக பொறுப்பை ஏற்ற காமராஜர் போராட்டம் முடிந்து, சட்டசபை தேர்தல் காலத்திலும், அதன்பின் ஏற்பட்ட மந்திரிசபை அமைப்பிலும், பின் ஏற்பட்ட ஒவ்வொரு மாறுதல்களிலும் எவ்வளவு சிரமத்துடன் ராஜ தந்திரத்துடன் நடந்து திறம்பட பணி ஆற்றியதை மறந்துவிடக்கூடாது.

அவரது சேவை தொடர்ந்து இருக்கவேண்டும் என்பதற்கு அடிக்கடி அவரையே தேர்ந்தெடுத்திருப்பதே போதுமான அத்தாட்சி. அவரை எதிர்ப்போர்கள் போட்டியிட்டு மூக்கறுபட்ட நிகழ்ச்சிகள் அநேகம்.

ஸ்தாபனத்தின் வேலை, சொந்த வேலை என்பதை பாகுபாடு செய்துகொள்ளாமல் சுற்றுப் பிரயாணம், பேச்சு, சிந்தித்து முடிவு செய்வது ஆகியவற்றிலே அவரது வாழ்க்கை பலியிடப்பட்டு வருகிறது. ஸ்தாபனம் வேறு தான் வேறு என்ற எண்ணமே இல்லாமல் சேவை செய்து வரும் தலைவரை எதிர்த்து இருவர் போட்டியிடுவது ஆச்சர்யமே.

சரியானபடிப்பு இல்லை என்று வாதங்கள் கிளப்பப்படுகின்றன. காமராஜ் தற்குறியல்ல. அடுத்த பாஷைக்காரர்கள் பேசும்பேச்சைக் கேட்டு அர்த்தமற்று தலையாட்டிவிட. அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்துக்கு அவர் செல்லாமல் இருக்கிறாரா? பேசாமல் இருக்கிறாரா? அல்லது கலந்து கொள்ளாமல் கௌரவத்துக்காக மட்டும் பதவி வகித்து காலாவதி காலத்தில் தலையைக் காட்டி பதவியைக் காப்பாற்றிக் கொள்கிறாரா? இதையெல்லாம் சிந்திக்கவேண்டும்.

மேலும் "தன்னை ஆதரிப்பவர்களுக்கு அவர் உதவி செய்கிறார்; அவர்கள் சுயநலத்துக்கு இவரைப் பயன்படுத்திக்கொள்ளுகிறார்கள்" என்றெல்லாம் வதந்திகள் பரப்பப்படுகின்றன.

தன்னை ஆதரிப்பவர்களுக்கு உறுதுணையாக நிற்கவேண்டியதுதான் தலைவனின் லட்சணம். கடமையும் அதுதான். அதை காமராஜ் செய்தால் குற்றம் என்று சொல்வது எந்த விதத்தில் பொருந்தும்?

வரப்போகும் சட்டசபை தேர்தலில் தனது பக்தர் குழாத்திற்கு இடம் தேடிக்கொடுக்கவே இவ்வருடம் நடந்த பஞ்சாயத்து தேர்தலிலிருந்து மாகாண காங்கிரஸ் கமிட்டி அங்கத்தினர்கள் தேர்தல்களிலெல்லாம் பொய்யும், மோசடியும், சூதும் வாதும் நடைபெற்றதாகப் பறை சாற்றப்படுகிறது.

இது தேர்தல்களில் தோல்வியுற்றவர்களின் ஓலம். வெற்றி பெற்றவர்களைக் கண்டு தோல்வியுற்றவர் சொல்லும் பழிசாட்டும் படலம்.

இத்தனையும் சீர் தூக்கிப் பார்த்துத்தான் நான் சொல்லுகிறேன் காமராஜுக்கு ஓட்செய்யுங்கள் என்று—தமிழ் நாடு காங்கிரஸ் கமிட்டிக்கு மீண்டும் தலைவராக காமராஜை தேர்ந்தெடுங்கள் என்று. எத்தனை பேர் போட்டியிட்டாலும் காமராஜ்தான் தேர்ந்தெடுக்கப்படுவார் என்பது நிச்சயம். அவரை அசைக்க இந்த வெறும் கூச்சல்களாலும் கோஷ்டிகளாலும் முடியாது என்பது வெள்ளிடைமலை. ஒருவர் எதிர்த்தபோதே தோல்வியை அறியாத காமராஜ் இருவர் எதிர்க்கும் போதா வாடப்போகிறார். அதோ வெற்றித் தேவி தன் கரங்களில் மலர் மாலைகளுடன் காட்சியளிக்கிறாள். தோள் சுமக்கும் மாலைகளுடன் பவனி வருபவர் யாருமல்ல, நம்ம காமராஜ்தான் என்று ஜேகோஷம் போட காலம் அதிக தூரத்தில் இல்லை.

வெற்றி நிச்சயமென்று கூறும் நீர் இத்தனை வக்கணையுடன் காமராஜருக்காக வாதாடுவானேன் என்று ஐயம் கிளம்பலாம். அதையும் தெளிவாக்கி விடவேண்டியது எனது கடமையும் பொறுப்புமாகும்.

வெற்றி என்பது காமராஜுக்குத்தான். அவரை எதிர்த்துக் கூச்சல் போட்டு தமிழ் நாட்டின் கௌரவத்தை பாழ்படுத்தி விடாதீர்கள் என்று எச்சரிக்கை செய்யவே நான்சொல்லவேண்டி ஏற்பட்டது. ஏன் தெரியுமா?

உண்மையில் காமராஜர் பதவி மோகத்தால் மறுபடியும் தேர்தலுக்கு நிற்கிறார் என்று கூறுவது சரியல்ல. தனக்குப் பதவி தேவையில்லையென்று அவர் பல தடவைகள் பொது மேடைகளில் விளக்கிக் கூறியிருப்பதை மறந்துவிடக் கூடாது. அப்படியானல் மீண்டும் ஏன் நிற்கிறார் என்று கேட்கலாம். காரணம் இருக்கிறது. அவர் தொடங்கி வைத்த புது வழிகள் கோஷ்டிப் பூதங்கள் யாவும் அப்படி அப்படியே பாதியில் நிற்கின்றன. அவர் இப்போது விட்டுவிட்டுப் போய்விட்டால் எல்லாம் ஒரே குழப்பமாகிவிடும் என்ற கவலையினுல் தான் மறுபடியும் பொறுப்பேற்கும் கடமையுணர்ச்சியினுல் தேர்தலுக்கு நிற்கிறார் என்று நான் நினைக்கிறேன். இந்த சமயத்தில் மற்றவர்கள் தன்னைப் பதவி மோகம் என்று குற்றம் சாட்டுகிறார்கள் என்பதற்காகவாவது விட்டுவிட்டுப் போய்விடலாமென்று அவர் நினைத்தாலும், அவரை விட்டுவிட்டால், புதிதாக வருகிற பேர்வழி வரப்போகும் பொதுத் தேர்தலில் பூதகணங்களுக்குப் பதில் சொல்லி சமாளிக்க முடியாமல் திண்டாடித் தெருவில் நிற்க வேண்டியிருக்கும். வீண் குழப்பத்தை வரவழைத்துக் கொண்டு மாகாண காங்கிரஸை சீர்திருத்தி அமைத்துவிட முடியுமென்று கனவுகண்டு, அவரைப் போகவிட்டு விட்டுப் பிறகு விழிக்கவேண்டாமென்று எச்சரிக்கிறேன். புத்திசாலிகள் இதைக் கவனிப்பார்களாக.

---

(முன்பக்கத் தொடர்ச்சி)

டிராமில் ஏறிப்பெண்கள் ஆசனத்திலிருந்த இரு குழந்தைகளோடு ராஜத்தை உட்காரவைத்து விட்டு தோல்வாரைப் பிடித்தவண்ணம் நின்றுகொண்டிருந்தேன். மனம்மாத்திரம் முப்பதைந்து ரூபாயில் என்னவெல்லாம் செய்திருக்கலாமென்று எண்ணமிடத் தொடங்கியது.

ஸெண்ட்ரல் ஸ்டேஷன் திருப்பம் முடிந்ததும் ராஜம் இருந்த மூலையிலிருந்து ஒரே கூச்சல் எழுந்தது. அங்கேயிருந்த குழந்தையொன்று வீரிட்டு அழவே அந்த மூலைக்கு ஓடினேன். ராஜத்திற்கும் ஒரு குழந்தைக்கும் சண்டை வரவே ராஜம் தன் பலத்தை பொம்மையின் மூலம் காட்டியிருக்கிறாள். பொம்மையோ மக்ப் பொம்மை, அந்தக் குழந்தையின் தலையை நன்ருகப்பதம் பார்த்து விட்டது. லேசாக ரத்தம் கசிந்து கொண்டிருந்தது.

ராஜத்தைத் தூக்கிக்கொண்டு ஓடும் டிராமிலிருந்து குதித்தேன். கொலைக்குற்றத்திற்குப் பயந்தோடும் குற்றவாளியைப்போல் சந்துகளில் புகுந்து ஓடி வீடுவந்து சேர்ந்தேன்.

'பொம்மை வாங்கி வந்தீர்களா, எங்கே அது, சாரதா வினவினுள்.' ராஜம் பொம்மை எங்கேயென்று நான் அவளைக்கேட்டேன். அவள் வெளியே கையைக்காட்டி ஏதோ உளரினுள்.

'நிஜமாக சாரதா, நான் நல்லதாக ஒரு பொம்மை வாங்கிக் கொடுத்திருந்தேன் அதை உன் பெண் எங்கேயோ எறிந்து விட்டாள்'. அழுகுறையாகக்கூறினேன்.

நன்ருயிருக்கிறது நீங்கள் பொம்மை வாங்கிவந்த அழகு என்ருள் சாரதா.

இந்தப்பெண்களுக்கு இரக்கமேயில்லை.

---

# அரசாங்கப் பொறுப்பில் வர்த்தகம் நடத்த

## 10 கோடி ரூபாய் மூலதனத்துடன் வர்த்தக கார்பரேஷன்

மத்திய சர்க்கார் தற்போது நடத்திவரும் வர்த்தக ரீதியான ஏற்றுமதி இறக்குமதி நடவடிக்கைகளை ஏற்று நடத்த, சட்ட பூர்வமான வர்த்தக கார்பரேஷன் ஒன்றை அரசாங்கம் அமைக்க வேண்டுமென்று, அரசாங்க வர்த்தகம் பற்றிய கமிட்டி, இந்திய சர்க்காருக்கு சமர்ப்பித்துள்ள தனது அறிக்கையில் சிபாரிசு செய்திருக்கிறது. அரசாங்க வர்த்தகம் பற்றிய பிரசினையை ஆராய்ந்து ஆலோசனை கூறுவதற்காக இக்கமிட்டி 1949 அக்டோபரில் இந்திய சர்க்காரால் அமைக்கப்பட்டது. டாக்டர் பஞ்சாப் ராவ் தேஷ்முக் இக்கமிட்டியின் தலைவராகவும், பி. டி. ஹிம்மத் சிங்கா, எச். வி. காமத், பி. பி. ஜுன்ஜுன் வாலா, எஸ். வி. கிருஷ்ணமூர்த்தி ராவ், ஆர். என். கோயங்கா, என். காண்டேகர் ஆகியோர் கமிட்டியின் அங்கத்தினர்களாகவும் நியமிக்கப்பட்டிருந்தனர்.

கமிட்டியின் அங்கத்தினர்கள் ஏகோபித்து சமர்ப்பித்துள்ள இந்த அறிக்கையில், சிலவகை வியாபாரங்களில் அரசாங்கம் ஈடுபடுவது விரும்பத்தக்கதல்ல என்றும், வேறு சிலவகை வியாபாரங்களில், குறிப்பாக சர்வதேச வர்த்தகத்துறையில், அரசாங்கம் ஈடுபடுவது நியாயமே யென்றும் கூறப்பட்டிருக்கிறது. அமெரிக்கா, கானடா போன்ற நாடுகளில் அரசாங்கம் வியாபாரத்தில் ஈடுபடுவதை மக்கள் ஆதரிப்பதேயில்லை. தனிநபர் முயற்சிக்கு ஊக்கமளிப்பதைப் பிரதான நோக்கமாகக் கொண்டே அந்த நாடுகளின் பொருளாதாரக் கொள்கைகள் வகுக்கப்பட்டு வருகின்றன என்ற போதிலும், அந்த நாடுகளிலுங்கூட, அரசாங்கம் ஓரளவு வர்த்தகத்தில் ஈடுபடுவது, பொதுவான பொருளாதாரக் கொள்கைக்கு முரண்பட்டதாகக் கருதப்படுவதில்லை என்று கமிட்டி எடுத்துக் காட்டுகிறது. உதாரணமாக, பிரிட்டனில் இறக்குமதி வர்த்தகத்தில் கிட்டத்தட்ட சரிபாதி சர்க்கார் ஏஜென்ஸிகள் மூலமாகவே நடைபெறுகிறது.

இந்த ஸ்தாபனம் சட்டபூர்வமாக அமைக்கப்படவேண்டுமென்றும், இதன் அங்கீகரிக்கப்பட்ட மூலதனம் பத்துக் கோடி ரூபாயாகவும், செலுத்தப்பட்ட மூலதனம் 2 கோடி ரூபாயாகவும் இருக்க வேண்டுமென்றும் கமிட்டி சிபாரிசு செய்திருக்கிறது. மூலதனத்தில் 51% மத்திய சர்க்காரால் செலுத்தப்படவேண்டும். மீதியிருப்பது ராஜ்ய சர்க்கார்களுக்கும் தனிநபர்களுக்கும் அளிக்கப்படவேண்டும். மத்திய சர்க்கார் மூலதனத்துக்கு உத்தரவாதமளிக்க வேண்டும். குறைந்த பட்சம் இவ்வளவு லாபம் கிடைக்குமென்றும் தனிப்பட்ட பங்குதாரர்களுக்கு உத்தரவாதமளிக்கவேண்டும். மற்ற வர்த்தக ஸ்தாபனங்களுக்கு விதிக்கப்படும் எல்லா வரிகளும் இந்த கார்ப்பரேஷனுக்கும் விதிக்கப்படவேண்டும். ஸ்தாபனம் வியாபார நோக்குடன் இயங்கி வரவேண்டும். இதன் அன்றாட அலுவல்களைக் கவனிப்பதற்கு நல்ல நாணயஸ்தர்களான வியாபாரிகள் கொண்ட நிர்வாக போர்டு ஒன்று இருக்கவேண்டும். போர்டின் உத்தரவுப்படி அலுவல்களைக் கவனிக்க நிர்வாக டைரெக்டர் ஒருவரும் நியமிக்கப்படவேண்டும். கார்ப்பரேஷனின் முதல் நிர்வாக போர்டையும், போர்டின் தலைவரையும் சர்க்கார் நியமிக்கவேண்டும் என்று கமிட்டி கூறியிருக்கிறது.

**உத்தேச வர்த்தக கார்ப்பரேஷனின் அலுவல்கள்**

1. உணவுதானியங்கள், ரசாயன உரங்கள், எஃகு, கிழக்காப்பிரிக்கப்பருத்தி ஆகிய பொருள்கள் இறக்குமதி சம்பந்தமான வியாபார அலுவல்களையும், சர்க்கார் செய்துகொண்டுள்ள பண்டமாற்று ஒப்பந்தங்களையும் நிறைவேற்றி வைப்பதற்கு அவசியமான அலுவல்களையும் இந்திய சர்க்காரிடமிருந்து இந்த ஸ்தாபனம் மேற்கொள்ளவேண்டும்.

2. நிலக்கரி, குட்டைஇழைப் பருத்தி ஆகியவற்றின் ஏற்றுமதி வர்த்தகத்தில் கார்ப்பரேஷனுக்கு ஏகபோக உரிமை கொடுக்கப்படவேண்டும்.

3. குடிசைத்தொழில் உற்பத்திப் பொருள் ஏற்றுமதி வர்த்தகத்தில் தனிநபர்கள் முயற்சி கொள்வது ஆரம்ப காலத்தில் லாபகரமாயிருக்காதாகையால், வர்த்தகத்தை முதலில் துவக்கி வைக்கும் வகையில், குடிவசத் தொழில் உற்பத்திப் பொருள்களின் ஏற்றுமதி வர்த்தகத்தையும் இந்த ஸ்தாபனமே ஏற்று நடத்தவேண்டும். குடிசைத் தொழில் உற்பத்திப் பொருள்களுக்கு வெளிநாடுகளில் சரியான மார்க்கெட்டுகள் ஏற்பட்ட பிறகு கார்ப்பரேஷன் இத்துறையின் தனது அலுவல்களைக் குறைத்துக்கொண்டு, தனிப்பட்டவர்கள் இந்த வர்த்தகத்தில் ஈடுபட ஊக்கமளிக்க வேண்டும்.

4. நாட்டின் நலனைப் பொறுத்து, எந்த ஒரு சரக்கு விஷயத்திலாவது அரசாங்கங்கள் வர்த்தகத்தில் ஈடுபடவேண்டுமா அல்லது விலகிக்கொள்ளவேண்டுமா என்பது பற்றி, இந்தக் கார்ப்பரேஷன் அவ்வப்போது சர்க்காருக்கு ஆலோசனை கூறி வரவேண்டும். ஆனால், கார்ப்பரேஷன், சர்க்காரின் முன் அங்கீகாரம் பெறாமல் தனது அலுவல்களை புதிதாக எந்தச் சரக்குகளுக்கும் விஸ்தரிக்கக்கூடாது.

5. கார்ப்பரேஷன், வேண்டும்போது, இந்திய மார்க்கெட்டுகளில், வெளிநாடுகள் நேரடியாகச் சரக்குகள் வாங்குவதற்கோ விற்பனை செய்வதற்கோ அந்த நாட்டு சர்க்காரின் பிரதம வியாபாரியாகவோ, ஏஜெண்டாகவோ தொழில் பட்டுவரலாம்.

6. இந்திய வியாபாரிகள் கேட்டுக்கொள்ளும்போது, அவர்கள் சார்பில், அவர்களுடைய சொந்தப் பொறுப்பில், வெளிநாட்டு வியாபாரிகளுடன் பேரங்கள் நடத்தலாம்.

**அத்யாவசியமான சரக்குகள்**

அத்யாவசியமான சில சரக்குகளின் இறக்குமதி ஏற்றுமதி வர்த்தகம் சம்பந்தமாகவும் கமிட்டி தனது அபிப்பிராயத்தைத் தெரிவித்திருக்கிறது.

**கச்சா சணல்:** இந்திய சணல் ஆலைகள் சங்கம் ஒரு மத்திய ஸ்தாபனத்தின் மூலம் கொள்முதல் செய்யும் ஏற்பாட்டைப் பின்பற்றவேண்டும்.

**அயக்கலப்பற்ற உலோகங்கள்:** இந்த உலோகங்கள் விஷயத்தில் சர்க்கார் மீண்டும் வர்த்தகத்தில் ஈடுபடுவதுபற்றி கார்ப்பரேஷன் பரிசீலனை செய்ய வேண்டும்.

**சணல் உற்பத்திப் பொருள்கள், அவலரக்கு, மாங்கனீஸ்.** கார்ப்பரேஷன், ஓரளவு அனுபவம் பெற்ற பிறகு, இந்தச்சரக்குகள் விஷயத்தில் சர்க்கார்வர்த்தகத்தில் ஈடுபடலாமா என்பதைப் பரிசீலனை செய்துபார்க்க வேண்டும்,

**தேயிலை, அப்பிரகம்.** தற்போது அரசாங்கம் வர்த்தகத்தில் ஈடுபடவேண்டியதில்லை.

**நிலக்கரி:** அரசாங்க வர்த்தகம் நீடித்து நடைபெற்று வரவேண்டும்.

**சர்க்கரை:** உள்நாட்டு உற்பத்தி தேவை போக மிச்சப்படும் அளவுக்குப் பெருகும் வரை இது பற்றிகவனிக்க வேண்டியதில்லை.

அரசாங்கம் வியாபாரம் நடத்துவதில் தேசிய பங்குகள், கப்பல்கம்பெனிகள், இன்ஷ்யூரன்ஸ் கம்பெனிகள் ஆகியவற்றின் சேவையைப் பயன்படுத்திக் கொள்வது மிக அவசியமென்று கமிட்டி வற்புறுத்திக் கூறியிருக்கிறது. உள்நாட்டுவர்த்தகத்தைக் கூட்டுறவு அடிப்படையில் மாற்றியமைக்க வேண்டுமென்றும் கமிட்டி வற்புறுத்தியிருக்கிறது. அரசாங்க வர்த்தகத்தை விருத்தி செய்வதற்கு இந்நாட்டில் பாங்குகள், கப்பல் கம்பெனிகள், இன்ஷ்யூரன்ஸ் கம்பெனிகள் ஆகியவற்றின் சேவைகள் சரியானபடி பயன்படுத்திக் கொள்ளப் படுமேயானால், அரசாங்கத்தின் பொருளாதாரக் கொள்கைகளை மற்ற துறைகளில் நிறைவேற்றி வைப்பதற்கு பெரிதும் உதவியாயிருக்கும் என்று கமிட்டி அபிப்பிராயந் தெரிவித்திருக்கிறது. இதைப் போலவே, உள்நாட்டு வர்த்தகத்தைக் கூட்டுறவு அடிப்படையில் மாற்றியமைப்பதன் மூலம் கார்ப்பரேஷனின் அலுவல்களை மேலும் விஸ்தரிக்க வேண்டிய அவசியமில்லாமல் செய்துவிடலாமென்று கமிட்டி அபிப்பிராயப்படுகிறது. கூட்டுறவு முறைப்படியான வியாபாரத்தில், அரசாங்க வர்த்தகத்தின் மூலம் கிடைக்கக்கூடிய எல்லா நன்மைகளும் கிடைத்து விடுவதுடன், தனிநபர் முயற்சியின் அனுகூலங்களும்பாதுகாக்கப்படுகின்றனவென்று கமிட்டிகூறுகிறது. இறக்குமதி செய்யப்படும் சரக்குகளின் வினியோகத்தை, உபயோகிப்போரின் கூட்டுறவு பண்டகசாலைகள் மூலம் திருப்திகரமாகவும் ஒழுங்காகவும் நடத்த முடியுமென்று கமிட்டி கருதுகிறது. ஒவ்வொரு ராஜ்யத்திலும் இத்தகைய கூட்டுறவு பண்டகசாலைகள் ஏராளமாக அமைக்கப்படவேண்டுமென்றும், அரசாங்க வர்த்தக கார்ப்பரேஷனுடன் நேரடியாகத் தொடர்பு கொண்ட மத்திய கூட்டுறவு பண்டகசாலையொன்று ஒவ்வொரு ராஜ்யத்திலும்ஏற்படுத்தப்படவேண்டுமென்றும் கமிட்டி சிபாரிசு செய்திருக்கிறது.

**இறக்குமதிக் கட்டுப்பாடுக் கொள்கை**

இந்திய சர்க்காரின் இறக்குமதிக் கட்டுப்பாடுக் கொள்கையும் அதையொட்டிய நடைமுறையையும் ஒரு ஒழுங்கு முறைப்படிமாற்றியமைக்கவேண்டுமென்றும் கமிட்டி சிபாரிசு செய்திருக்கிது. ஒரு சரக்கு விஷயத்தில், வாலாயமான வர்த்தக நிலவரம் மீண்டும் ஏற்படும்படி செய்யும் பொருட்டு இறக்குமதி அனுமதிகளை தாராளமாகவழங்க நிர்ணயிக்கப்பட்டுள்ள காலம் முடிவடைவதற்கு முன்னால், அந்தச் சரக்கை, தாராள பொது லைசென்சு ஜாபிதாவில் சேர்ப்பதில்லை என்ற வழக்கத்தை சர்க்கார் பின்பற்றினால், விலை உயரும் என்ற எண்ணத்துடன்சரக்குகள் ஏராளமாக இறக்குமதி செய்யப்படுவதற்குள்ள சந்தர்ப்பத்தைப் பெரிதும் குறைத்துவிடலாம் என்று கமிட்டி கூறுகிறது.

---

(12-ம் பக்கத் தொடர்ச்சி)

செடிகொடிகளுடன் சேர்ந்தே, தங்களுக்கு வேண்டிய அத்யாவசியமான சத்துப்பொருள்களை எடுத்துக்கொள்கின்றன.

மண்ணின் சத்தை அதிகப்படுத்துவதற்கு, கரிமப் பொருள்களுடன் ரசாயன எருக்களையும் சேர்த்து உபயோகிக்கலாம். இவை ஒவ்வொன்றிலும் கலந்துள்ள பொருள்களை நன்கு ஆராய்ந்து பார்த்து, எந்த முறையில் உபயோகித்தால் அதிக அனுகூலமடைவதாயிருக்குமென்பதை உணர்ந்து, ஒன்ற சேர்த்து உபயோகிக்க வேண்டும்.

## இந்தியாவில் தொழில்நுட்பக் கல்வி

[2-ம் பக்கத் தொடர்ச்சி]

ஸ்தாபனங்களும் தொழில் ஸ்தாபனங்களும் கூட்டாக முயற்சி செய்தால்தான் இது சாத்தியமாகும். ஆனால், துரதிருஷ்டவசமாக, இந்நாட்டில் இந்தக் கூட்டுப் பொறுப்பை இவர்கள் இன்னமும் சரிவர உணர்ந்து கொள்ளவேயில்லை. ஆகவே, தொழில்நுட்ப சிப்பந்திகள் பயிற்சி விஷயத்தில் தற்போது காணப்படும் பல்வேறு குறைபாடுகளை அகற்ற மிகப் பெரிய மாறுதல்களை உடனடியாக மேற்கொண்டாகவேண்டும். இது விஷயமாக, விஞ்ஞான ஆள்பலக் கமிட்டி சிபாரிசுசெய்துள்ள விரிவான நீண்டகாலத் திட்டமொன்று இப்பொழுது சர்க்காரின் பரிசீலனையில் இருந்துவருகிறது.

அக் கமிட்டியின் சிபாரிசுக்கிணங்க, இந்திய சர்க்கார், மாதம் 150 ரூபாய் வீதம் மேல் வகுப்புமாணவர் 250பேருக்கும், மாதம் 75 ரூபாய் வீதம் கீழ் வகுப்பு மாணவர் 200 பேருக்கும், வேலைப் பயிற்சி காலத்தில் உபகாரச் சம்பளம் வழங்க ஏற்பாடு செய்திருக்கின்றனர்.

சமீபகாலம் வரை, இந்தியாவில் தொழில்நுட்பக் கல்வி அபிவிருத்தி வேலைகள் ஒன்றுக்கொன்று தொடர்பில்லாமலே நடைபெற்று வந்துள்ளன. படிப்பின் தரமும் இடத்துக்கிடம் மாறுபட்டிருந்தது; நாட்டின் தேவைகளுக்கு சிறிதும் சம்பந்தமில்லாத வகையிலேயே பாடபோதனைகளும் நடைபெற்று வந்தன. நாட்டில் தொழில்நுட்பக் கல்வி அபிவிருத்தி, நல்ல நல்ல பலனளிக்கக் கூடியபடி, நன்கு இணைக்கப்பட்டு ஒரு திட்டப்படி நடைபெறவேண்டுமென்பதை இப்பொழுது எல்லோருமே ஒப்புக்கொண்டுள்ளனர். இந்த நோக்கத்துடன், இந்திய சர்க்கார், நாட்டில் தொழில்நுட்பக் கல்வி அபிவிருத்திக்கான திட்டங்களை வகுத்து நடத்துவதில் சர்க்காருக்கு ஆலோசனை கூறுவதற்காக, அகில இந்திய தொழில்நுட்ப சபையொன்றை 1945-ல் அமைத்தனர். இந்த சபையில் மொத்தம் 66 அங்கத்தினர்கள் இருக்கின்றனர். இந்திய சர்க்காரின் பல்வேறு இலாகாக்களின் பிரதிநிதிகளும், ராஜ்ய சர்க்கார்கள், தொழில்—வர்த்தகத் துறைகளின் பிரதிநிதிகளும், தொழிலாளர் ஸ்தாபனங்கள், தொழில்துறையினர் சங்கங்கள், கல்வி ஸ்தாபனங்கள் ஆகியவற்றின் பிரதிநிதிகளும் இந்த சபையில் இருக்கின்றனர்.

நாட்டில் தொழில் கல்வியை ஒருதரப் படுத்துவதிலும், ஏற்கெனவேயுள்ள கல்வி வசதிகளை சீர்படுத்தி விஸ்தரிப்பதிலும் இச்சபை வெகுதூரம் முன்னேறியிருக்கிறது. தொழில்நுட்பக் கல்வியை ஒருதரப்படுத்தும்பொருட்டு, எஞ்சினீயரிங், தொழில்நுட்பத் துறைகளின் பிரதான பிரிவுகளின் பாடத்திட்டங்களை ஆராய்ந்து ஒருமுகப்படுத்துவதற்காக, 6 அகில இந்திய தொழில்நுட்பப் பாட ஆராய்ச்சி போர்டுகளைக் கமிட்டி நியமித்திருக்கிறது. இந்த போர்டுகள் பல்வேறு தொழில்நுட்பப் பயிற்சிகளுக்கும் விரிவான பாடத் திட்டங்களைத் தயாரித்துள்ளன. முழுநேரம் வகுப்பு அடிப்படையிலோ, ஒருநேரம் வகுப்பு அடிப்படையிலோ, பாடங்களைநடத்துவதற்கு வசதி செய்யப்பட்டிருப்பது இந்தப் பாடத் திட்டங்களில் காணப்படும் முக்கியமான அம்சமாகும். இந்தப் பாடத் திட்டங்களில் வேலைப்பயிற்சிக்கு அதிக முக்கியத்துவமளிக்கப் பட்டிருக்கிறது. தொழில்களிலும், சர்க்கார் இலாகாக்களிலும் ஏற்கனவே வேலைசெய்து வருபவர்களும் புத்தகங்கள் வாயிலாக விஷயங்களைக் கற்றுக்கொள்வதற்கும் வசதி செய்யும் நோக்கத்துடனேயே, ஒருநேர வகுப்புகள் நடத்த ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. தொழில்நுட்பக் கல்வி விஷயத்தில் சபை நிர்ணயித்துள்ள அடிப்படையான அம்சங்களை சர்வகலாசாலைகள் உட்பட எல்லாக் கழகங்களும் வெகு சீக்கிரத்திலேயே பின்பற்றுமென்று நம்பப்படுகிறது.

உயர்தர தொழில்நுட்பக் கல்விக்காகப் புதிய ஸ்தாபனங்களை அமைக்கவும், ஏற்கெனவேயுள்ளவற்றை விஸ்தரித்து உறுதிப்படுத்தவும் இப்பொழுது மேற்கொள்ளப்பட்டுள்ள திட்டங்களெல்லாம், இந்தசபையின் முயற்சிகளின் பலனாக ஏற்பட்ட வேலையாகும். கடந்த சில ஆண்டுகளில் அதிக முன்னேற்றம் ஏற்பட்டிருந்தபோதிலும், இத்துறையில் இன்னமும் செய்யப்படவேண்டிய காரியங்கள் பல உள்ளன.

தொழில்நுட்பம் தெரிந்தவர்களுக்கு, தொழில்துறை நிர்வாகத்திலும் வியாபாரத்திலும் பயிற்சியளிப்பது பற்றியும் அகில இந்திய தொழில்நுட்பக் கல்வி சபை தீவிரமாக ஆலோசித்து வருகிறது.

இந்தியாவுக்குத் தேவையாயிருக்கும் விஞ்ஞானிகளையும், தொழில்நுட்ப வல்லுநர்களையும், பயிலுவிக்கும் பிரசினையை இங்குள்ள பயிற்சி வசதிகளை விஸ்தரிப்பதன்மூலம் ஓரளவுக்கு சமாளித்துக்கொள்ள முடியும். இந்தியாவில் பயிற்சி வசதிகள் இல்லாத சில துறைகளில், இந்தியர்கள் வெளிநாடுகளில் பயிற்சிபெற வசதி செய்யவேண்டும். இப்பொழுது மேற்கொள்ளப்பட்டுள்ள அபிவிருத்தித் திட்டங்கள் நிறைவேற்றி வைக்கப்பட்டதும் இந்தியாவிலேயே பயிற்சிபெற்ற சிப்பந்திகள் ஏராளமான பேர் கிடைப்பார்களாயினும், நம்முடைய கல்வி, ஆராய்ச்சி ஸ்தாபனங்களை நடத்தும் பொறுப்பையும், தொழில்களை ஆரம்பித்து நிர்வகிக்கும் பொறுப்பையும் ஏற்று நடத்த, நல்ல பயிற்சிபெற்ற சிப்பந்திகள் குழு ஒன்று இப்பொழுது நமக்கு இருப்பது மிக அவசியமாகிறது. தற்போது நாட்டில் கிடைக்கும் வசதிகளைக் கொண்டே இவர்களை நாம் தயார் செய்துவிட முடியாது என்பது கண்கூடு. ஆகவே தொழில் துறையில் முன்னேற்றமடைந்துள்ள நாடுகளின் உதவியை இது விஷயத்தில் நாடுவது தவிர்க்க முடியாததேயாகும்.

### வெளிநாடுகளில் பயிற்சி.

தொழிலபிவிருத்தி, விஞ்ஞான ஆராய்ச்சி, விவசாயம், கல்வி முதலிய விஷயங்களில் உலகத்தின் மற்ற நாடுகளில் ஏற்பட்டுவரும் முன்னேற்றத்தை அவ்வப்போது தெரிந்துகொள்ளும் பொருட்டு அந்த நாடுகளுடன் இந்தியா நெருங்கிய தொடர்பு கொண்டிருப்பது மிக அவசியமாகிறது. இந்திய தொழில் நுட்ப வல்லுநர்களும் விஞ்ஞானிகளும் வெளிநாடுகளுக்கு விஜயம்செய்து, அந்நாடுகளின் தொழில்முறைகளைக் கற்றறியவும், ஆராய்ச்சி நிலையங்களில் சேர்ந்து வேலைசெய்யவும், தொழில்நுட்பக் கல்வி போதிப்பதற்கும் பயிற்சி யளிப்பதற்கும் கையாளப்படும் நவீன முறைகளைத் தெரிந்துகொள்ளவும் வசதிசெய்து கொடுப்பதன் மூலம் வெளிநாடுகளுடன் நெருங்கிய தொடர்பு ஏற்படுத்தப்பட்டு வருகிறது.

நாட்டின் சகல துறைகளிலும் அபிவிருத்தி ஏற்படவேண்டுமாகையால், குறிப்பாக, பின்வரும் மூன்று தேவைகளைப் பூர்த்தி செய்யும் வகையில், இந்திய விஞ்ஞானிகளுக்கும், தொழில் வல்லுநர்களுக்கும் வெளிநாடுகளில் பயிற்சியளிக்கவேண்டிய அவசியம் இப்பொழுது ஏற்பட்டிருக்கிறது (1) தொழிலபிவிருத்திக்கு வேண்டிய தொழில்நுட்ப வல்லுநர்களைப் பயிலுவிப்பது; (2) விஞ்ஞான, தொழில் ஆராய்ச்சிக்கும் கல்வி போதனைக்கும் சிப்பந்திகளைப் பயிலுவிப்பது; (3) சர்க்கார் நடத்தும் ஸ்தாபனங்களுக்கும், சர்க்காரின் ஆதரவுபெற்று நடைபெறும் ஸ்தாபனங்களுக்கும் தேவைப்படும் குறிப்பிட்ட சில ரக சிப்பந்திகளைப் பயிலுவிப்பது. இந்தத் தேவைகளை ஓரளவு பூர்த்தி செய்துவைக்கும் வகையில், இந்திய சர்க்கார் ராஜ்ய சர்க்கார்களின் ஒத்துழைப்புடன், வெளிநாட்டுப் பயிற்சித் திட்டமொன்றை ஆரம்பித்துவைத்தனர். இந்தத் திட்டம் 1945-லிருந்து அமலிலிருந்துவருகிறது. இதுவரை ஆயிரத்துக்கு அதிகமான மாணவர்கள் பயிற்சிக்காக பிரிட்டன், அமெரிக்கா முதலிய நாடுகளுக்கு அனுப்பப்பட்டுள்ளனர். பல்வேறு துறைகளில் பயிற்சிபெற்றவர்களின் எண்ணிக்கை வருமாறு:

| பயிற்சி விவரம். | வெளிநாடுகளுக்கு அனுப்பப்பட்ட மாணவர்களின் எண்ணிக்கை. |
|---|---|
| எஞ்சினீரிங் ... | 397 |
| விஞ்ஞானம் நீங்கலான பிறவகைப் படிப்பு ... | 16 |
| கல்வி ... | 86 |
| விஞ்ஞானம்-(விவசாயம்உட்பட)... | 501 |
| தொழில் நுட்பம் ... | 95 |

பயிற்சிக்காக வெளிநாடுகளுக்கு அனுப்பப் பட்டவர்களில் நூற்றுக்கு 60 பேர் பயிற்சி முடிந்து இந்தியாவுக்குத் திரும்பிவிட்டனர். முந்திய வருஷங்களில் விட்டுப்போன சில துறைகளையும் சேர்த்துக்கொள்ளும் வகையில் இவ்வருஷம் இப்பயிற்சித் திட்டம் மாற்றியமைக்கப்பட்டிருக்கிறது. ஆனால், பொருளாதார நிலைமை சரியாக இல்லாத காரணத்தால், இவ்வருஷம் அனுப்பப்படும் நபர்களின் எண்ணிக்கை மிகக் குறைவாகவே இருக்குமென்று தோன்றுகிறது;

தொழில் நுட்பக் கல்வி சம்பந்தமாக ஏற்பட்டுள்ள பிரசினைகள் பலவகைப்பட்டவையாகும். இவைகளை சமாளித்து முன்னேறுவதில் ஓரளவு வெற்றிகிடைத்திருக்கிறதென்றபோதிலும், அதிக முன்னேற்றமடைந்துள்ள மேலைநாடுகளில் கிடைக்கும் வசதிகளெல்லாம் இந்தியாவிலும் கிடைக்கும்படி செய்வதற்கு இன்னும் சிறிது காலம் காத்திருக்கவேண்டும்.

—

# ஒன்றில் பத்து!

பிரிட்டனின் பல சிறிய கைத்தொழில்களைப்பற்றி அதிகமாக நமக்கு ஒன்றும் தெரிவதில்லை. அவற்றின் வருவாய் பெரிய உருக்குத்தொழில் ஜவுளித் தொழிலைப்போல் அதிகமாக இல்லாவிட்டாலும் தேசத்தின் பொருளாதாரத்திற்கு அதிகம் உதவி வருகிறது. அப்படிப்பட்ட சிறிய கைத்தொழில்களில் ஒன்று வாங்குபவர் தம் இஷ்டம் போல மேஜையாகவோ அல்லது அலமாரியாகவோ பூட்டிக்கொள்ளும்படியான மரச்சாமான் செட்டுகளைத்தயாரித்து வருகிறது.

இந்த செட்டில் பதம் செய்யப்பட்ட கருப்பு அல்லது வெண்மை நிற பலகைகளும், லேசான மெல்லிய உருக்குச்சட்டங்களும் அடங்கியிருக்கின்றன. இவைகள் எல்லாம் பார்ப்பதற்கு கவர்ச்சிகரமாக இருப்பதுடன் உஷ்ணம் குளிர் இரண்டையும் எதிர்த்து நிற்கக்கூடியவை.

ஒரு 'செட்டி'லுள்ள பலகைகளைக்கொண்டு நாம் மேஜையாக பூட்டிக்கொள்ளலாம். அல்லது புத்தக அலமாரியாக தயாரித்துக்கொள்ளலாம்; அல்லது பீரோவாக பூட்டிக்கொள்ளலாம்; அங்கங்களை சேர்ப்பதற்கு வஜ்ரம், ஆணி, ஸ்க்ரூக்கள் எதுவுமே தேவையில்லை.

இவைகளை எப்படி பூட்ட வேண்டும் என்பதை விவரிப்பதான படமொன்றையும் தொழிற்ஸ்தாபனம் சப்ளை செய்கிறது. இந்த ஸ்தாபனம் விற்பனை செய்யும் ஒரு செட்டைக் கொண்டு நாம் இஷ்டப்படி பத்து தினுசான சாமான்களாக பூட்டிக்கொள்ளலாம்.



கணவனும் மனைவியும் உருக்குத் தகடுகளை எப்படி எப்படி இணைத்து உருவாக்கலாமென்று யோசித்து வேலை செய்கிறார்கள்.



விதம் விதமாக வளைத்துக்கொள்ளத் தக்க மேஜை ஒன்று.



புத்தக அலமாரியாகவும் அமைத்து மேலே ரேடியோவும் வைக்கலாம்.

## மக்கும்—ரசாயன எருவும்

ரசாயன எருவை உபயோகிப்பதால் மண்ணுக்குக் கெடுதல் ஏற்படுகிறதா என்ற கேள்வி அடிக்கடி கேட்கப்படுகிறது. "அவை சரியான முறைப்படி உபயோகிக்கப்பட்டால் கெடுதல் ஏற்படுகிறதில்லை" என்றுதான் இதற்குப்பதில் சொல்லவேண்டும். ரசாயன எருவை உபயோகிப்பது, செடிக்கு உணவு ஊட்டுவதற்கு காரிய சாத்தியமானதும், நல்ல பலனளிக்கக்கூடியதுமானதொரு உபாயமேயாகும். ஒவ்வொரு செடியின் பிரத்தியேகமான தேவைக்கேற்பவும், அது வளர்க்கப்படும் காலநிலையைப் பொறுத்தும் ரசாயன எரு உபயோகிக்க வேண்டும். ரசாயன எரு உபயோகிக்கப்படும்போது, மண்ணில் ஈரச்சத்து போதிய அளவு இருக்க வேண்டுமென்பதை மறந்துவிடக்கூடாது.

மண்ணின் சத்துக் குன்றிப்போகாமல் பாதுகாப்பதற்கு எவ்வாறு இலை மக்குகள் மாத்திரம் போதாவோ, அது மாதிரியே ரசாயன எருவை உபயோகிப்பதால் மாத்திரம் இதைச் செய்துவிட முடியாது. மண்ணின் இயற்கைத் தன்மையும், செடிகொடிகள் மண்ணிலிருந்து தண்ணீரையும், சத்துப் பொருள்களையும் சுலபமாக கிரகித்துக் கொள்வதற்கான வேர்மண்டலத்தை அமைத்துக் கொள்ளக்கூடியதாக இருக்கவேண்டும். மண்ணிலிருந்து தண்ணீரும் சத்துப் பொருள்களும், வேர்கள் வழியாக செடிகொடிகளின் சகல பாகங்களுக்கும் பரவவேண்டும். வேர்மண்டலம் போதியதாக இல்லாததும், வேர்கள் மண்ணிலிருந்து தண்ணீரையும் சத்துப்பொருள்களையும் கிரகித்துக்கொள்வதற்குப் போதிய படிவேலைசெய்யாததுமே, விளைச்சல் குறைந்துபோவதற்குப் பெரிதும் காரணமாகும். வேர்கள் வேலைசெய்ய முடியாமற்போவதற்கு மண்ணின் இயற்கைத் தன்மைகள் ஏற்றபடி இல்லாமலிருப்பதே காரணமாகும்.

வேர்கள் சரிவர வேலைசெய்வதற்கு. பூமியில் தண்ணீர் தேங்கி நிற்காமலும், காற்றும், ஈரப்பசையும் எல்லா இடங்களுக்கும் பரவி, வேர் மண்டலத்துக்கு சுலபமாகக் கிடைக்கக்கூடியபடியும். பூமியின் இயற்கை அமைப்பு இருக்கவேண்டும். மண் கெட்டியாக இல்லாமல், ஈரம் இறங்கக்கூடியபடி உதிர்உதிராக இருந்தால், மண்ணில் கலக்கும் கரியமில வாயு விரைவில் வெளியேற்றப்படுவதும், பிராணவாயு விரைவில் சப்ளையாவதும்சாத்தியமாகஇருக்கும். மண்ணின் அமைப்புமுறை இத்தகையதாக இருப்பதற்கு, ஆழமான வேர்கொண்ட இருபுறவெடிகள் உட்பட, பூமியின் வளப்பத்தை மேம்படுத்தக்கூடிய இலை மக்குகளை மண்ணில் கலப்பது அவசியமாகும். செடிகொடிகள் நன்றாக வளருவதற்கு, அதன் வேர்மண்டலத்திலுள்ள மண் காற்றோட்டம் நிறைந்ததாயும் ஈரச் சத்து உள்ளதாயும் இருக்கவேண்டும். செடிக்கு உணவூட்டுவதில் ரசாயன எருக்கள் சரிவரப் பயன்படும்படி செய்வதற்கும் இது பெரிதும் உதவியாக இருக்கும்.

மண்ணில் இலைதழையை மக்க வைக்கும் வேலையை திரள்திரளான அங்கஜீவிகள்செய்து முடிக்கின்றன. மண் மக்குவதன் மூலம்தான், அதிலுள்ள சத்துப்பொருள்கள் தனியாகப்பிரிந்து செடிகளுக்கு கிடைக்கிறது. இந்த அங்கஜீவிகள் தங்களுக்கு வேண்டிய சத்துப்பொருள்களை, அவை மக்கவைக்கும் பொருள்களிலிருந்தும், மண்ணிலிருந்தும் எடுத்துக்கொள்கின்றன. பாக்டீரியாவும், காளானும், மற்ற அங்கஜீனிகளும் மண்ணில் உபயோகிக்கப்படும் பொருளின் தன்மையைப்பொறுத்து,

[10-ம் பக்கம் பார்க்க]

Edited, Printed and Published by Thiruloka-Sitharam, at the Hanuman Press, Samaspiran Street, Tiruchirapalli.